# புத்த ஞாயிறு

—நாடகம்—

நா. பார்த்தசாரதி




தமிழ்ப் புத்தகாலயம்
58, டி.பி.கோயில் தெரு, திருவல்லிக்கேணி
சென்னை-600005

# முன்னுரை

நாடகம் என்னும் சொல் வழக்கு மிகப் பழைய தமிழ் நூல்களிலேயே காணப்படுகிறது. முத்தமிழில் ஒன்ருகிய நாடகத் தமிழ் ஒருகாலத்தில் நம் மொழியில் மிகச் சிறப்பாக விளங்கியிருக்கின்றது என்பதனைச் சிலப்பதிகார அடியார்க்கு நல்லார் உரைமூலமும், பிற வரலாற்று இலக்கியக்குறிப்புக்களின் மூலமும் தெள்ளிதின் உணர முடிகிறது. 'நாடகவழக்கினும் உலகியல் வழக்கினும்' (தொல்:பொருள்) என வரும் தொல்காப்பிய நூற்பாவிலிருந்து இச்சொல் வழக்கின் தொன்மை புலனுகிறது. நாடகம் என்ற ஒரு கலை ஏன் தோன்றியது என்ற வினு எழுந்தால் பயனுள்ள விடை கிடைக்கக் கூடும்.

தன்னுடைய வாழ்க்கையையும், அதில் மலிந்து கிடக்கும் பல்லாயிரம் உணர்ச்சியலைகளையும் தன்னிலிருந்து பிரித்து வேறுபடுத்திக் கலையாக நிறுவிப் பார்க்க வேண்டுமென்ற ஆசைதான் அது. தன் முகத்தை அடிக்கடி கண்ணுடியில் அழகு பார்த்துக்கொள்வது போல் வாழ்க்கையை அரங்கத்தில் பார்க்க வேண்டும்-வாழ்வதுபோல் நடித்துப் பார்க்க வேண்டும். என்ற ஆசை ஏற்பட்டது. அவ்வாறு அரங்கத்தில் நடிக்கப்படும் வாழ்க்கை, உலகத்தில்வாழ்கின்ற நடைமுறைவாழ்வைக் காட்டிலும் தரமாய் வீறுமிக்கதாய்ச் சுவைபயப்பதாய் இருக்கவேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டது. நடிப்பவர்களுக்குப் புகழும், காண்பவர்களுக்குச் சுவையும். தரக்கூடிய சிறந்த வாழ்க்கையை மேடையிற் சித்தரிக்க விரும்பினுன் மனிதன். வாழ்வில் இருந்துகொண்டே வாழ்வின் உணர்ச்சிகளை வேருகப் பிரித்து மேடையில் நடித்து அழகு பார்க்கும் இந்தப் புதிய விருப்பத்தால் மனிதனுக்குச் சில வசதிகள் கிடைத்தன. துன்பப்படுகிறவன் இன்பத்தின் சிகரத்தை நடிக்கவும், காணவும் முடிந்தது. மாறுபட்ட உணர்ச்சி நளினங்களை வேறுபட்ட மனிதர்கள் ஓரிடத்தில் ஓர் அரங்கில் ஒரு சேரக் காண முடிந்தது. இதனுல்

வாழ்க்கை என்றும்-வாழ்க்கையிலிருந்து பிறந்த கலை என்றும் இரு பிரிவு ஏற்பட்டது.

உணர்ச்சிகளோடு போராடுவது வாழ்க்கை. உணர்ச்சிகளோடு விளையாடுவது கலை. வாழ்க்கைக்குப் பயன் வாழ்வது. கலைக்குப் பயன் அநுபவிப்பது. கலை என்பது நாடக வழக்கு. வாழ்க்கை என்பது உலகியல் வழக்கு. வாழ்க்கையில் துன்பங்களே அதிகம். கலையிலோ துன்பத்தை நடித்தாலும், பார்த்தாலும் அதனால் கிடைப்பது இன்பமே. ஆரம்பக் காலத்தில் பாடல் ஒன்றைப் பாடி அப்பாடற் பொருளுக்கேற்ப அரங்கில் அவிநயம் காட்டும் அளவில் அமைந்திருந்தது கூத்துக்கலை. பின் அக்கூத்துடன் இயற்றமிழாகிய உரையாடலும், கலந்தவிடத்து அதற்காக நெடு நேரம், நடித்துக்கொண்டு செல்வதற்கேற்பப் புனையப்பட்ட வாழ்வு ஒன்று நாடகக் கதையாகத் தேவைப்பட்டது. ஆடலும், அவிநயமும், பாடலும் கலந்து கூத்துமாத்திரையாய் நின்ற கலை விதவிதமான உணர்ச்சிகள் பெற்ற கதாபாத்திரங்களைக் கொண்டு பேச்சினும், மெய்ப்பாட்டினும், பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து வளர்ந்து விழுமிய நாடகக் கலையாயிற்று. ஆதியில் தமிழின் கண் கூத்தெனக் கூறப்படும ஆடல் பாடல், அவிநயம், எவ்வாறு இருந்திருக்கலா மென்று நினைத்துப் பார்க்கும்போது இன்று கேரளத்தில் ஆடப்படும் கதகளிக் கூத்துடன் ஒரு புடையொப்புமை உடையதாக இருந்திருத்தல் வேண்டுமெனத் தெரிகிறது. பண்டைத் தமிழ் நூல்களிற் கூறப்படும் 'கொடு கொட்டிக் கூத்து', 'சாக்கைக் கூத்து' என்பனவும் இவ்வாறே அமைந்திருத்தல் வேண்டும். கூத்து என்ற நிலையிலிருந்து வளர்ந்து அரங்க நிகழ்ச்சிக்கு நாடகம் என்ற பெயர் வந்ததும் அதன் தன்மை புதுமை பெற்றது. அவ்வாறு புதுமை பெற்ற பின்னும் பழைய வடிவங்களான குறவஞ்சிக் கூத்து, தோற்பாவைக் கூத்து, கழைக்கூத்து, தெருக்கூத்து முதலிய கூத்துக்கள் இன்றளவும் திருவிழாக் காலங்களிலும், பிற இடங்களிலும், நடித்துக்காட்டப்படுவதைக் காண்கிறோம்.

அரங்கில் நாடகத்துக்கென்று ஒரு கதை. இதில் உணர்ச்சிகளாலும், குணங்களாலும், வேறுபட்ட பல வகைக்கதா பாத்திரங்கள் அடுத்தடுத்து வளரும் சம்பவத் திருப்பங்கள். கதையின் இணையற்ற உச்சநிலை... இவையெல்லாம் ஏற்பட்டு வளரும் சூழ்நிலை உருவானபோதுதான் இந்தத் துறை தனி மதிப்பும் கவனிப்பும் பெற்றது. நாடகத் துறைக்கு ஏற்பட்ட இந்த வளர்ச்சி சிலப்பதிகாரக் காலத்துக்கு முன்பே உயர்வு பெற்று ஓங்கத் தொடங்கி இருந்ததென்று கூறலாம். பரதம், அகத்தியம், முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றியம், மதிவாணர் நாடகத்தமிழ் நூல், கூத்த நூல் ஆகிய நாடகத் தமிழ் நூல்களெல்லாம் முன்பு இருந்தன என்பது சிலப்பதிகாரத்துக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையினால் தெரிய வருகிறது. நாடகக் கலை இணையற்ற வளர்ச்சி பெற்றிருந்த அந்தக் காலத்துக்குப் பின் 'இசை நாடகம் காமத்தை விளைவிக்கும்' —என்ற தவறான கருத்தால் எவராலும் கவனிக்கப்படாமல் புறக்கணிக்கப் பெற்று நலிந்து போகும் நிலையும் ஒரு காலத்தில் வந்தது. அதுதான் நாடகக் கலையின் வரலாற்றிலேயே இருண்ட காலம்.

இனி நாடகக் கலையில் பழந்தமிழர் கொண்டிருந்த வழக்காறுகள் சிலவற்றைக் கவனிப்போம். நடிப்போர் நின்று நிகழ்த்துமிடம் அரங்கம் எனவும், காண்போர் அமருமிடம் அவையம் எனவும் பிரிக்கப்பட்டது. அரசர் முதலாயினோருக்காகச் சிறப்பு வகையால் நடிக்கப்படுபவை 'வேத்தியல்' எனவும்—எல்லார்க்கும் பொதுவாக நடிக்கப்படுபவை 'பொதுவியல்' எனவும் வகைசெய்யப்பட்டிருந்தன. அரங்கம் எவ்வாறு அமைய வேண்டும் என்றும் பழைய நாடக நூல்கள் எல்லாம் இலக்கண வரையறை செய்திருந்தன. கூத்தருக்கும், பாணருக்கும், விறலியர்க்கும், பொற்பூவும், பொற்றாமரையும் போல்வன பரிசில் நல்கிச் சிறப்புச் செய்யும் வழக்கத்தை அரசர்கள், மேற்கொண்டிருந்தனரென்று தெரிகிறது. சிறந்த கலைஞர்கள் 'தலைக்

கோல்' பட்டம் பெற்றனர். இவ்வாறு உயர் நிலையடைந்த காலத்துக்குப் பின்பு நெடு நாட்கள் கவனிப்பாரற்றுத் தாழ்ந்து தெருக் கூத்தாம் தொடக்க நிலைக்குப் போய் விட்ட நாடகக் கலையை மீண்டும் சில பெருமக்கள் தோன்றி உயர்நிலைக்குக் கொண்டு வர முயன்றனர், முயல்கின்றனர், முயல்வர்.

அடுக்கடுக்கான சம்பவக் கோவையும், உணர்ச்சிகரமான திருப்பங்களும் உள்ள கதை நாடகத்துக்குத் தேவை. உரையாடற் பேச்சாலும், மெய்ப்பாட்டாலும், இசையாலும், சுவையை உண்டாக்கிச் சிறப்படைவது நடிப்பு. நடிப்பில் பிறக்கும் சுவை தோன்றுமிடம் ஒன்று நுகருமிடம் மற்றொன்று. தொல்காப்பியர் 'இருவகை நிலத்தின் இயல்வது சுவையே' என்றார். நடிக்கும்போது தான் மேற்கொண்ட பாத்திரத்தின் உணர்ச்சிக்கு ஏற்ப நடிகன் உண்டாக்கிக் கொள்ளும் தத்ரூபமான போலித் தன்மை தான் மூலமான முதற் சுவை. அதைக் காணும் அவை மக்களிடம் உண்டாகும் அனுபவம் கிளைச் சுவை. நடிகன் சுவையை உய்ப்பவன். இரசிகன் சுவையைக் கண்டு அநுபவிப்பவன். மிகப் பலராகிய அநுபவிப்பவர்களின் முன் தனி ஒருவன் தனி ஒரு சுவையைத் தத்ரூபமாக நடித்துக் காட்டுவது சிரமமான காரியமல்லவா? எல்லோராலும் இயலாத அத்தகைய சிரமமான காரியத்தைச் செய்வதால்தான் நடிகனுக்குப் பெருமை. ஒன்பது வகைச் சுவைகளுக்கும் வெளியீடாக ஏற்படும் பாவங்களுக்குப் பழைய தமிழில் 'மெய்ப்பாடு' என்று பெயர். உணர்ச்சிகள் படியும் கண்ணாடியாகத்தானே மாறும் திறமை இருந்தால் நடிகன் வெற்றி பெற்று விடுகிறான்.

நாடகத் தமிழின் இலக்கணத்தையும் முறைகளையும் இக்காலத்திலும் அறிந்துகொள்ள ஏற்ற விதத்தில் உயர் தரமான நூல்களை எழுதி அளித்துள்ளனர் இரு பெருமக்கள். 'நாடகவியல்' என்னும் நூலை எழுதிய பரிதி

மார்ற்கலைஞரும், மதங்க சூளாமணி என்னும் நூலை எழுதிய விபுலானந்த அடிகளும, என்றும் தமிழர்களின் 'நன்றிக்கு உரியவர்கள். ஆங்கிலம், தமிழ், வடமொழி ஆகிய மூன்று மொழி நாடக இலக்கிய வளத்தையும் ஒப்பு நோக்கி எழுதப்பட்ட நூலே மதங்க சூளாமணி. மதுரைத் தமிழ்ச் சங்கத்தினரால் வெளியிடப் பெற்ற இவ்வரிய நூல் இப்பொழுது பதிப்பற்றுப் போனமை தமிழுக்குப் பெரிய இழப்பே ஆகும்.

இனி நூல்களும் நாடகக் கதைகளும் எழுதியதோடு அமையாமல், நடித்தும் நாடகக் கலையை வளர்க்கப் பல்லாற்றானும் பாடுபட்டவர்கள்சிலரை நினைக்கவேண்டும். சங்கரதாஸ் சுவாமிகள், பம்மல் சம்பந்தமுதலியார், நவாப் இராச மாணிக்கம், முத்தமிழ்க் கலாவித்துவரத்தின டி.. கே. எஸ். சகோதரர்கள், சேவா ஸ்டேஜ்காரர்கள், மனோகர், சோ குழுவினர் போன்ற பலர் நாடகக் கலையை வளர்த்து வந்தார்கள்—வருகிறார்கள். ஆயினும் தமிழ் நாடகக் கலை இன்னும் மேல்நிலை பெறுவதற்கு முயன்று கொண்டே இருக்க வேண்டும். நாடகத்துக்கென்றே அமைந்து நாள்தோறும் பல ஆயிரம் திரட்டித் தரும் நாடக அரங்கங்கள் கல்கத்தா நகரத்தில் இருப்பதுபோல் சென்னை, மதுரை, திருச்சி முதலிய தமிழ் நகரங்களில் ஏற்பட வேண்டும். நாடகத்தில் நடிக்கும் நடிகர்களின் வறுமையும், வாழ்க்கைத் தொல்லைகளும் குறைந்து வாழ்க்கைத் தரமும், வசதியும் பெருக வேண்டும். நாடக மேடை அரங்க நிர்மாணத்துக்குப் புதுமையான பல நவீன சாதனங்களையும், உத்திகளையும் மேற்கொள்ள வேண்டும். மக்களின் ஆதரவும், கலைஞர்களின் திட நம்பிக்கையும் இருந்தால் நாடகம் புனிதமான கலையாக வளர்ந்துவிட முடியும்.

நாடகம் எழுதுபவர்களும், நடிப்பவர்களும் நாடகக் குழு நடத்துபவர்களும், 'ஐயோ! பொருட்காட்சிகளும்

கோவில் திருவிழாக்களும் அழைக்கா விட்டால் பிழைக்க முடியாதே' என்று அஞ்சாமல் தினசரி மேடைகளில் நடித்து வளம் பெற்று வாழ்வதற்கு ஏற்ற தனி நாடகத் தியேட்டர்கள் தமிழ்நாட்டின் பெரிய நகரங்களிலெல்லாம் வந்துவிட்டால் இக்கலை வளரத் தடையே இல்லை. நாடகம் உயிரோட்டமுள்ள கலை! பல்லாயிரங் காலத்துப் பயிர். அது நலிந்தால் தமிழ் நலிந்த மாதிரி. நாடகம் நலியக் கூடாது. நலிய விடக் கூடாது. படிக்கவும் நடிக்கவும் ஏற்ற நாடகங்கள் தமிழில் நிறைய வெளிவர வேண்டும் என்ற விருப்பத்தின் விளைவே புத்த ஞாயிறு முதலிய இத் தொகுதியின் நாடகங்கள். மேடை நாடகம் தவிர வானொலி, தொலைக்காட்சிக்கும் இன்று நாடகங்கள் தேவைப்படுகின்றன. நாடகக் கலை கருத்துக்களை மக்களை நோக்கிக் கொண்டு செல்லும் தற்காலச் சாதனங்களில் மிகவும் கூரானது என்பதை யாவரும் அறிவர். புத்த ஞாயிறு முதலிய நாடகங்கள் இப்பயனை ஓரளவேனும் விளைவிக்குமாயின் மகிழ்ச்சி கொள்வேன். இதனை நூல் வடிவில் கொணரும் தமிழ்ப் புத்தகாலயத்தாருக்கும், வாசகர்களுக்கும் என் அன்பையும் நன்றியையும் கூறிக் கொள்வதில் மகிழ்ச்சியடைகிறேன்.

அன்புடன்,

தீபம்
சென்னை
30-11-85

நா. பார்த்தசாரதி

# புத்த ஞாயிறு

## காட்சி-1

**நேரம்-மாலை; இடம்:- பூம்புகார் நகர இந்திரவிகாரத்தின் கூடம்.**

*காவிரிப்பூம்பட்டினத்தின்—மிகப்பெரிய புத்த விகாரமான இந்திர விகாரத்தின் உள்ளே ஒரு மாலை வேளையில் கதை தொடங்குகிறது. விட்டு-விட்டு, மணி ஓசை. இடையிடையே முரசுகளின் மெல்லியஒலிகள்—தொலை தூரத்திலிருந்து கேட்பதுபோல் கேட்கிறது. புத்தம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி, தர்மம் சரணம் கச்சாமி—என்ற குரல்கள் (இனிய பண்பாடுவதை ஒத்த குரலில்) — அருகிலும், தொலைவிலும் மாறி மாறிக் கேட்கின்றன. இரு புத்தபிட்சுக்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டிருக்கின்றனர். காட்சி தொடங்குகிறது.*

முதல் பிட்சு : அடிகளே! இந்த ஆண்டு வைசாக பூர்ணைமைக்கு நான் மணிபல்லவத் தீவில் இருக்க முடியாது. இங்கேயே பூம்புகார் இந்திர விகாரத்தில் நிறையப் பணிகள் இருக்கின்றன. நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?

இளம் பிட்சு : நான் மணிபல்லவ யாத்திரை செய்வதாகவே இருக்கிறேன். கோமுகிப் பொய்கையைத் தரிசனம் செய்ய வேண்டும். நம் சமயத்தின் புண்ணியத் தலமான மணிபல்லவத் தீவில் உள்ள அந்தப் பொய்கையைப் பற்றிப் பலர் பலமுறை கூறக் கேட்டிருக்கிறேன். பிறவிப் பிணி நீக்கும் மருந்து அறவாழி அந்தணனின் அருளுக்குப் பாத்திரமான அந்தத் தீவில் இருப்பதாக எல்லாப் பெரியவர்களும் சொல்லுகிறார்களே? ஆனால் கோமுகிப் பொய்கைக்குப் போக ஒரு பக்குவம் அடைய வேண்டும், உயிர்களின் துக்கங்கள் அழியுமிடமே கோமுகி என்பது நம் தத்துவம்.

மு. பிட்சு : ஆம்! ஆம்! அதில் சந்தேகமென்ன அடிகளே! உயிர்களின் துக்கங்களைப் போக்குவதுதான் கோமுகிப் பொய்கை. அத்தகைய சிறந்த பொய்கையை உடைய தலமும் சிறப்புடையதுதானே? துக்கம், துக்கநிவாரணம், துக்க உற்பத்தி என்ற மூன்று வகையாலும் உலகத்தை ஆராய்வது நம் சமயமாயிற்றே! நம் சமய வாழ்வின் நோக்கமே—மணிபல்லவத் தீவிற்கு ஒருமுறை போகாமல் நிறைவெய்துவதில்லையே? ஆனால் மணிபல்லவ யாத்திரைக்கு முன் ஒரு பிட்சுவுக்குப் போதுமான அநுபவப் பாடங்கள் அவசியம் வேண்டும்.

இ. பிட்சு : அடிகளே! விலகி நில்லுங்கள். அதோ ஒரு கயமைக் குணம் நிறைந்த களிமகன் குடித்துவிட்டுப் பெண்ணொருத்தியோடு தள்ளாடியபடியே வருகிறான். வரவரப் பெருமை மிகுந்த இந்தச் சோழர் கோ நகரில் இப்படிக் களிமக்கள் அதிகமாகி விட்டார்கள். இவர்

களுடைய கண்ணிற்கு நம்மைப் போன்ற பிட்சுக்கள் எல்லாம் கேலிப்பொருட்களாகவே தோன்றுகிறார்கள்.

(குடித்துவிட்டுத் தள்ளாடியபடியே வருகிற ஒரு களிமகனின்—பிதற்றல் ஒலிகள்—அவன் தன்னருகே வரும் பெண்ணிடம் கூறும் -புத்த பிட்சுக்களைப் பற்றிய கேலி வார்த்தைகள்)

மூ. பிட்சு : இப்படிப்பட்ட பிரத்யட்சவாதிகள் இன்று மிக அதிகமாகி வருகிறார்கள். ''கண்டதே காட்சி கொண்டதே கோலம்—வாழ்ந்தவரை வாழ்க்கை—நுகர்ந்த வரை இன்பம்'' என்று எண்ணுகிறவர்கள் இவர்கள். ஆ...அதோ கேளுங்கள்! அந்தக் களிமகனே குடிவெறியில் ஒரு பாட்டுப் பாடுகிறான். அவனோடு வருகிற கூத்திப் பெண்ணும் ஏதோ சேர்ந்து உளறுகிறாளே...?

(களிமகனும் கூத்தியும் வெறிமிக்க போதையில் தட்டுத் தடுமாறிப் பாடும் பாட்டு)

இசைப்பாட்டு (1)

எடுப்பு

ஆ. குரல் : கண்டதே காட்சி–கொண்டதே கோலம்
பெ. குரல் : ஆம்–கண்டதே காட்சி–கொண்டதே கோலம்

தொடுப்பு

இந்த மண் வாழ்வின் இன்பங்கள் யாவும்
சொந்தமென் றுள்வதே சமயம் ஆம்
சொந்தமென் றுள்வதே சமயம்.
—கண்டதே காட்சி. கொண்டதே கோலம்
—தத்துவம் யாவும் செத்தவை யாகும்.
செத்தவை யாவும் பிறப்பதே இல்லை.
—கண்டதே காட்சி கொண்டதே கோலம்.

முடிப்பு

கள்ளும் கனவும் கொள்ளும் சுகமே
இன்றும் நாளையும் என்றும் நிஜமே

எள்ளும் சமயம் தத்துவம் யாவுமே
உள்ளவை அல்ல வென்று ரைத்திடுவீர்
கொள்ளை கொள்ளை இன்பமிவ்வுலகம்
கூடுதல்—பிரிதல் யாவும் மகிழ்ச்சி
வெள்ளி மதுக்கிளர் விழியாளே உன்தன்
உள்ள மறிவதே வேதங்கள் உடலுணர்வதே.
இன்பங்கள்—துன்பம் ஏதுமில்லை—
—இவ்வுலகில்—

*(இருவர் குரலும்)* கண்டதே காட்சி-கொண்டதே கோலம்-
தத்துவம் யாவும் செத்தவை ஆகும்.

*(குரல் மெல்ல மெல்லத் தொலைவில் சென்று நலிகிறது)*

மு. பிட்சு: *கேட்டீர்களா அடிகளே? கண்டதே காட்சி, கொண்டதே கோலமாம். தத்துவங்கள் எல்லாம் செத்தவை ஆகுமாம்.*

இ. பிட்சு: *பாவம்! பாவம்! என் செவிகளைப் புத்தர் பெருமான் மன்னிக்கட்டும். ''கள்ளும் களவும் கொள்ளும் சுகமே—இன்றும் நாளையும் என்றும் சாசுவத'' மென்று பேசுகிறானே பாவி?*

மு. பிட்சு: *கவலைப்படாதீர் அடிகளே! புத்த ஞாயிறு தோன்றும் காலத்தில் உலகில் இப்படிப்பட்ட பாவங்கள் எல்லாம் அழியும். எங்கும் கருணையின் பொலிவும், கனிவும், திகழும். அதுவரை நமக்குப் பொறுமையும் அமைதியும் வேண்டும் அடிகளே! பொறுமையும் சகிப்புத் தன்மையும்தான் துக்க நிவாரணத்தை உண்டாக்க முடியும் என்ற நமது சமயத்தத்துவத்தை அதற்குள் மறந்துவிட்டீர்களா, என்ன?*

இ. பிட்சு: *ஒருபோதும் இல்லை! ஆனால் இந்தக் களிமகன் என் உணர்ச்சியைத் தூண்டிவிட்டு விட்டான். 'இவர்களெல்லாம் வாழ்வில் திருந்த வேண்டுமே, இப்படிக் கீழாயிருக்கிறார்களே' என்ற கருணையின் அடிப்படையில் தான் என் உணர்வே இப்போது இங்கு கிளர்ந்தது.*

மு. பிட்சு: பார்க்கலாம்!—இவர்களைப் போன்றவர்கள் திருந்துவதற்குப் புத்த ஞாயிறு வழி செய்கிறதா இல்லையா என்றுதானே தெரியப்போகிறது? முதலில் துக்கம் கண்ணுக்குத் தெரிகிறது. பிறகு துக்கங்கள் வாழ்வில் உற்பத்தியாகும் முறை தெரிகிறது. அதற்கும் பிறகுதான் துக்கநிவாரணம் தெரிகிறது. நீரோ இளம் வயதுத் துறவி. அடிக்கடி பொறுமை இழந்து உணர்ச்சி வயப்பட்டு விடுகிறீர். அனுபவங்கள் முதிர முதிரத்தான் மனத்தில் புத்த ஞாயிறு உதிக்கும். நீர் பிட்சுவாகி இந்தப்புத்த விகாரத்திற்கு வந்து சில நாட்களே ஆகின்றன. பிரத்யட்சவாதியாகிய இந்தக் களிமகன் எதிர்ப்பட்டதற்கே இவ்வளவு வருந்துகிறீர்கள். இன்னும் எவ்வளவோ மனிதர்களைச் சந்திக்கவேண்டியிருக்கும். எவ்வளவோ விவாதங்களை நடத்தவேண்டியிருக்கும். அவ்வாறெல்லாம் பலரையும் பலவற்றையும் சந்தித்த பின்பு கோமுகிப் பொய்கையைக் காண்பதுதான் நன்மை தருவதாக இருக்கும். எவ்வளவிற்கு உலகைத் துறக்க முயல்கிறோமோ அவ்வளவிற்கு உலகை நாம் நெருங்கினால்தான் பின்பு துறக்க முடியும். இந்தக் காவிரிப்பூம் பட்டின நகரம் இருக்கிறதே, இது ஒரு வெறும் நகரம் மட்டுமல்ல. இல்லறத்தார்களுக்கும், துறவறத்தார்களுக்கும், இராஜ தந்திரிகளுக்கும், வீரர்களுக்கும் பலப்பல அனுபவப் பாடங்களைக் கற்றுக்கொடுக்கிற பெரியதொரு பல்கலைக் கழகம் இது என்பதை நீங்கள் புரிந்துகொண்டாலே போதும்.

இ. பிட்சு: நீங்கள் சொல்வதை அப்படியே ஒப்புக் கொள்கிறேன். இனி உங்களைச் சந்திக்கும்போதெல்லாம் என் அனுபவங்களை அவ்வப்போது உங்களிடம் கூறுவேன். இப்போது நான் நாளங்காடிச் சதுக்கத்திற்குப் போய்க்கொண்டிருக்கிறேன். விடை கொடுங்கள், போய்வருகிறேன். மீண்டும் நாளைக்குச் சந்திக்கிறேன்.

மு. பிட்சு: நலமே விளைக! சென்று வாருங்கள்.

இ. பிட்சு: ஆம்! (தனக்குத் தானே கூறிக்கொள்வது போன்ற மெல்லிய குரலில்) அவர் கூறுவதும் மெய் தான். இந்தக் காவிரிப் பூம்பட்டின நகரமே ஒரு பெரிய பல்கலைக் கழகத்தைப் போன்றது. கோமுகிப் பொய்கைக்கு யாத்திரை சென்று மெய்யுணர்வு பெறு வதைவிட முதலில் இந்த நகரத்தைக் கற்று மெய் யுணர்வு பெறவேண்டும் நான்.

(திரை)

## காட்சி-2

### இடம்:-நாளங்காடி

(காவிரிப் பூம்பட்டினத்தின் மாபெரும் கடைவீதியும் நகரின் நடுமையமான பகுதியுமாகிய நாளங்காடி. பல விதமான வாணிகக் குரல்கள். இடையிடையே சிலம்பு குலுங்க நடனமாதர்கள் செல்கின்றனர். நடந்து செல் லும்—குதிரைகள், யானைகள் போக்குவரவு—பிளிறல் கனைத்தல் ஒலிகள், யாழ், குழல், முரசு வாத்தியங்களின் இடையிட்ட ஒலிகள்-சமயவாதிகள் 'என் சமயமே பெரியது' என்று தத்தம் சமயம் பற்றி வாதிடும் விவாத ஒலிகள்)

பு. பிட்சு: (அந்தச் சூழலில் தன் சமயத்தின் பெருமையைப் பற்றியும் சிறப்பாக அங்கே முழங்கவேண்டும் என்று கருதியவராக) கூடியிருக்கும் பூம்புகார் நகரப் பெரு மக்கள் அனைவரும் என் அருகே வாருங்கள்! சமயங்களில் சிறந்த அமைப்புடையது எங்கள் புத்த சமயமே ஆகும். உலகில் நிறைந்திருக்கும் சகல துன்பங்களும் போக வேண்டுமானால் புத்தஞாயிறு உடன்தோன்றவேண்டும்.

ஓர் இளைஞன்: நிறுத்துங்கள் அடிகளே! இந்தக் கூட்டத்தில் இருக்கும் என் போன்ற இளைஞர்களுக்கு ஒரு சந்தேகம்.

பு. பிட்சு: என்ன சந்தேகம் இளைஞனே! சந்தேகங்களைத் தெளிவு செய்ய நான் எப்போதுமே தயாராக இருக் கிறேன்! உன் சந்தேகத்தைக் கேள்.

இளைஞன்: இதோ கேட்கிறேன் ஐயா! ஏதோ புத்த ஞாயிறு என்று கூறினீர்களே, அது என்ன......? அந்த ஞாயிறு தோன்றும் காலத்தில் உலகில் என்னென்ன நன்மைகள் நிகழும்......? மக்கள் அதனால் என்னென்ன பயன்களை அடைவார்கள்? சற்று விளக்கமாகத்தான் கூறுங்களேன்!''

பு. பிட்சு: உன் போன்ற இளைஞர்கள் இத்தகைய கேள்விகளைக் கேட்பதற்குக் கோபம் காரணமில்லை. அறியாமை தான் காரணமென்று நினைக்கிறேன். புத்த ஞாயிறு தோன்றும் காலத்தில் கதிரவனும், சந்திரனும், தீங்கின்றி விளங்குவார்கள். நாளும் கோளும், நலிவின்றி நல்லனவாய் நிகழும். வானம் பொய்யாது. வளங்கள் குறையாது. உலகத்து உயிர்கள் துன்பமின்றி இன்பமே நுகரும். வளம் நிறைந்த மலைகளும், காடுகளும் வளம் சுரக்கும். பொருள் வளம் பெருகும். பசுக்கள் நலம் மிகுந்து நிறையப் பால் பொழியும். உலகத்தில் நோய்களே இல்லாமற் போய்விடும். கொடிய விலங்குகளும் தம்முள் பகைநீங்கி வாழும். கூனும், குருடும், ஊமையும், செவிடும் போன்ற அங்க ஈனர்களை எங்குமே காண முடியாதபடி உலகமே முற்றிலும் இன்பமாக மாறி விடும்.

இளைஞன்: மதிப்பிற்குரிய பிட்சுவே! உலகில் இப்படி மாறுதல்கள் எல்லாம் நிகழும் என்பதற்கு என்ன உறுதி இருக்கிறது? அதை நான் எப்படி நம்புவது? எப்படிப் புரிந்துகொள்வது?

பிட்சு: உன்னால் நம்ப முடியவில்லையானால் அதற்கு நான் என்ன செய்ய முடியும்? உன்னை நம்பவைக்கும் முயற்சியை மட்டுமே நான் செய்ய முடியும். அடியோடு உன்னை மாற்றுவதற்கு என்னால் முடியாது. உன் மனம் மாற அறிவுத்தெளிவு ஒன்றே துணைசெய்யும்.

இளைஞன்: மெய்தான்! என்னை உங்களால் மாற்ற முடியாது. ஆனால் உங்களை என்னால் மாற்ற முடியும்.

பிட்சு: எப்படி? எதைச்சொல்லி, என்ன சான்று காண்பித்து என்னை எளிதில் மாற்றிவிட முடியுமென்று நினைக்கிறாய் நீ?

இளைஞன்: எதைக் காண்பித்து மாற்றுகிறேன் என்று பார்க்கத் தயவு செய்து என்னோடு வாருங்களேன். இந்த நகரத்தில் பசிப்பிணியாலும், வறுமை வாட்டங்களாலும், நோய் நொடிகளாலும், நொந்துகிடக்கிறவர்களைக் காணவேண்டுமானால் 'உலக அறவியின்' பொது அம்பலத்திற்கு என்னோடு நீங்கள் வரவேண்டும். அப்படி வந்தால் அப்போது தெரியும் உங்கள் புத்த ஞாயிற்றின் நிலைமை!

பிட்சு: 'உலக அறவியின்' பொது அம்பலத்திற்கு நீ என்னை அழைத்துப் போவதாயிருந்தால் நான் தாராளமாக வருகிறேன். எனக்கு, அதில் ஆட்சேபணை ஏதும் இல்லை. இப்போதே அழைத்துச் செல். நான் ஆயத்தமாயிருக்கிறேன்.

இளைஞன்: ஆட்சேபணையில்லையானால் தாராளமாக வாருங்கள். போகலாம். என்னோடு புறப்படுங்கள். (இருவரும் போகின்றனர்)

பிட்சு: ஓ...இதோ இப்போதே வருகிறேன்...புறப்படு. (குதிரைக் குளம்பொலி-தேர்கள் செல்வது போன்ற பரபரப்பான சூழ்நிலை)

(திரை)

## காட்சி-3

### இடம்:–உலக அறவி

உலக அறவி: நோயாளிகள் பசிப்பிணியாளர்களின் கூட்டம் (நோயாளிகளின் ஈனக்குரல்கள் அங்க ஈனர்களின் கதறல்-முக்கலும் முனகலும்-ஐயோ, அப்பா போன்ற சோக ஒலிகள்)

இளைஞன்: அடிகளே! இதோ உலக அறவி வந்துவிட்டது! இவர்களைப் போன்றவர்களின் துன்பங்களிலிருந்துதான்

உங்கள் புத்தருக்கு ஞானம் பிறந்தது. ஆனால் இவர்களைப் போன்றவர்களின் பசியும், பிணியும் தீர வழி தான் இன்னும் பிறக்கவில்லை. இவர்களைப் போன்றவர்கள் தலைமுறை தலைமுறையாக இன்னும் உலகத்தில் வளர்ந்துகொண்டேதான் இருக்கிறார்கள். நோயும், நொடியும், பசியும், பாவமும் இவர்களோடு வழிமுறை வழிமுறையாக வந்துகொண்டே இருக்கின்றன. ஏன் அப்படி?

நீங்களோ உங்களுடைய இந்திர விகாரத்தின் வாசலில் வசதியாக நின்று கொண்டு புத்த ஞாயிறு தோன்றும் காலத்தில் உலகமே சுவர்க்க பூமியாக மாறிவிடும் என்று கதை அளந்து பாமரர்களை ஏமாற்றிக் கொண்டிருக்கிறீர்கள். இப்போது சொல்லுங்கள்! இவர்களுடைய இருண்ட வாழ்க்கையில் புத்த ஞாயிறு தோன்றிப் புத்தொளி பரப்புமா? பரப்பாதா? ஏன்? இவர்களுடைய குழிந்த வயிறுகளில் சோறு குவியாதது ஏன்? ஒளியிழந்த கண்களில் ஒளி தோன்றாதது ஏன்? என்று ஆவேசம் கொண்டவன் ஆகிய நான் எண்ணுவதில் பிழை என்ன இருக்கமுடியும்? என்னுடைய இந்தக் கேள்விகளுக்கு நீங்கள் பதில் என்ன கூறப் போகிறீர்கள்? சொல்லுங்கள்!......

பிட்சு: தம்பி! உன் கேள்விகள் மிக அழகாக இருக்கின்றன. ஆனால் ஆழமாக இல்லை. சார்வாக மதத்தைச் சேர்ந்தவர்களுக்குத்தான் சொற்களை இவ்வளவு அழகாகத் தொடுத்துப் பேசவரும். அவர்கள் தாம் இப்படிப் பொருளற்ற கேள்விகளைக் கூட அழகான சொற்களால் கேட்பார்கள். இறைவன் என ஒருவன் இல்லை என்பார்கள். நல்வினை தீவினைகளின் விளைவை ஒப்புக் கொள்ளமாட்டார்கள். தனித்தனியாகத் தங்கள் இன்பதுன்பங்களுக்குத் தங்கள் வினைகளே காரணமென்று புரிந்து கொள்ளாமல் இறைவனே காரண

மென்று தவருகக் கருதி மயங்கி அவனையும் சமயங்களை யும் பழிப்பார்கள்.

இளைஞன்: அடிகளே! நான் யாரையும், எதற்காகவும் பழிக்கவில்லை. இவர்கள் இப்படி வாழ நேர்ந்ததன் காரணத்தை மட்டுமே உங்களிடமிருந்து தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன்.

பிட்சு : நல்லது! அதைத் தெரிந்து கொள்ளுவதற்கு நீயும், நானும், சிறிது நேரம் விரிவாகப் பேசி வாதாட வேண்டும். இதோ இங்கே என்னையும் உன்னையும் சுற்றிக் கூடியிருக்கும் காவிரிப் பூம்பட்டினத்துப் பொது மக்கள் சாட்சியாக உன்னைக் கேட்கிறேன். சமய வாதம் புரிகிற இருவரும் ஒத்த அறிவுடையவராக இருக்க வேண்டும் என்பது நியாயம். என்னோடு சமயவாதம் புரிவதற்கு நீ கல்வியினுல் தகுதி உடையவனு என்று முதலில் நான் தெரிந்து கொண்டு விடுவது நல்லது. நீ எந்தெந்த நூல்களைக் கற்றிருக் கிருய் என்று சொல் பார்க்கலாம்.

இளைஞன் : வில்வித்தை, யானையேற்றம், குதிரையேற்றம், வாட்போர், மற்போர் முதலியவற்றை நன்ருகக் கற்றிருக்கிறேன்.

(பதிலுக்கு பிட்சுவின் ஏளனச்சிரிப்பொலி—தொடர்ந்து கூடியுள்ள பலரது சிரிப்பொலி)

பிட்சு: (சிரித்த சுவடு மாருமலே) தம்பி! உன்னுடைய வாட்டசாட்டமான உடம்பையும், முரட்டுத்தோற் றத்தையும் பார்த்தாலே நீ பெரிய வீரன் என்பது தெரிகிறது. ஆனுல் நான் இப்போது கேட்கும் கேள்வி உன் உடம்பின் வளர்ச்சியைப் பற்றி அன்று. மனத் தின் வளர்ச்சியைப் பற்றியே கேட்கிறேன். மனம் வளர்வதற்காக நீ என்னென்ன நூல்களைக் கற்றிருக் கிருய்? சமயங்களையும் தத்துவங்களையும் பற்றி நீ என்னென்ன தெரிந்து கொண்டிருக்கிருய்? என் னென்ன புரிந்து கொண்டிருக்கிருய்...?

இளைஞன்: எனக்கு அவற்றை எல்லாம் பற்றி எதுவும் தெரியாது.

பிட்சு: ஒன்றும் தெரியாத உன்னோடு எல்லாம் தெரிந்த நான் எப்படி வாதிட முடியும்?

இளைஞன்: இந்தக் கேள்வியின் மூலம் என்னை அவமானப் படுத்துகிறீர்கள் அடிகளே! என் வாழ்க்கையிலேயே நான் இவ்வளவு பெரிய ஏமாற்றத்தை யார் முன்னும் எதிர் கொண்டதில்லை. என்னுடைய தோள்களின் வலிமையால் எதையும் வென்றே பழக்கப்பட்டவன் நான். தோற்றுப் பழக்கப்பட்டதில்லை.

பிட்சு: தோள்களின் வலிமையால் மட்டுமே வெல்ல முடியாத எத்தனையோ அம்சங்கள் மனித வாழ்வில் உண்டு என்பதை நீ இன்னும் அறியவில்லை போலிருக்கிறது.

இளைஞன்: அப்படிப்பட்ட அம்சங்களில் கூட உங்களை வெற்றி கொள்கிற வலிமையோடு மறுபடி எப்போதாவது உங்களை நான் சந்திப்பேன் என்பதை மறந்து விடாதீர்கள் அடிகளே!

பிட்சு: அதைத்தானே நானும் எதிர்பார்க்கிறேன் தம்பீ!

இளைஞன்: போய் வருகிறேன் அடிகளே!

பிட்சு: நன்றாகப் போய்வா...

(இளைஞன் ஏமாற்றத்தோடு செல்கிறான். பிட்சு மட்டும் தயங்கி நிற்கிறார்)

பிட்சு: (தனக்குள்) இளைஞன் போய்விட்டான்! இதோ அருகிலிருக்கும் நாடகமகளிர் வீதி வழியே மறுபடி நாளங்காடிக்குப் போகிறேன். இன்னும் யாரையாவது சந்திக்க நேர்ந்தால் அதுவும் என் வாழ்க்கைக்கு ஓர் அநுபவ பாடமாக அமையும். நடன மாதரும்-பரத்தையரும் ஆகிய இளம் பெண்கள் வாழும் இந்த வீதி

யில் துறவியாகிய நான் செல்வதே பலத்த சந்தேகத்தைப் பிறருக்கு உண்டாக்கும். ஆயினும் நான் இந்த வீதி வழியேதான் போவேன்.

(கணிகையர் வீதிவழியே செல்லத் தொடங்குகிறார்)

(திரை)

## காட்சி-4

### இடம்:-கணிகையர் வீதி

(மனத்தை மயக்கும் குழல்-யாழ்-முதலிய கருவிகளின் இசையின் கதம்ப ஒலிகள், பெண்களின் பல்வேறு கீதங்களின் குரல்கள், பலர் நடமாடும் சலங்கை சிலம்பு ஒலிகள் - தத்தீம் - தீம் - ததன - தீம் என நட்டுவனார்கள் தாளமிடும் ஓசை)

(தெருவில் புகுந்த புத்த பிட்சு-தனக்குத்தானே கூறி வியந்து கொள்கிறார்.)

பிட்சு: ஆகா! என்ன வனப்பு...? எத்தனை பிரகாசம்? சொப்பனபுரி போல் அல்லவா இருக்கிறது இந்தத் தெரு...? இது யார் இவள்! பருவமும், இளமையும் சிலம்பு குலுங்கும் பாதங்களுமாக இந்தக் கணிகை ஏன் என்னை நோக்கி இப்படி ஓடிவருகிறாள். (குரலில் வியப்பு திகைப்பு)

கணிகை: சுவாமீ! வரவேண்டும். வரவேண்டும். தங்கள் நல்வரவை ஏற்பதற்கு எங்கள் வீதி பாக்கியங்கள் பல செய்திருக்க வேண்டும்.

பிட்சு: இளம் பெண்ணே! ஏறிட்டுப் பார்க்க வைக்கும் எழிலரசியே! நான் இந்த வீதியில் யாரை நாடியும், எதைத் தேடியும் வரவில்லை. மணிபல்லவ யாத்திரை செய்வதற்கு முன்னால் நான் அநுபவ பாடங்களை நிறையப் பெறவேண்டும் என்று இந்தப் பூம்புகார் நகரில் வீதி வீதியாகச் சுற்றி அலைகிறேன். வேறொன்றுமில்லை.

கணிகை: ஏன் வேறென்றுமில்லை? வேறு எல்லாமே இருக்கிறது. தயை கூர்ந்து என் இல்லத்திற்கு எழுந்தருளுங்கள். என் இசையைக் கேளுங்கள். என் நடனத்தைக் காணுங்கள். இந்த வீதியிலேயே என் குரலுக்கு ஈடில்லை...இதோ...

(பாடுகிறாள்)

இசைப்பாட்டு (2)

''வாரீர்! என் அழகைப்பாரீர்—
வடிவழகைப் பாரீர்
ஊரூராய் அலைந்தாலும் காணீர்
உயிருருவம் என்போலே
முத்துக்களை வைத்து த் தெரி பல்லோடே
முருக்கிதழ் சுரிகுழல்
சித்தத் தலம் ஒத்துத்தெரி சொல்லாடல்
கத்துங்கடல் அலைநீலக்
கரையிட்டொளிர் கலையாடத்
தத்திங்கிண தித்தோ மென நடமாடும்
கலைப்பட்டொளிர் விழிமானே-நானே.
(மீண்டும்) வாரீர் என் அழகைப் பாரீர்
வடிவழகைப் பாரீர்
ஊரூராய் அலைந்தாலும் காணீர்
உயிருருவம் என் போலே.

பிட்சு: உன் குரல் இனிமையாயிருக்கிறது பெண்ணே! உன் உடலும் வனப்பு நிறைந்ததாயிருக்கிறது. ஆனால் இவற்றில் எல்லாம் நான் யாருடைய திறமையைக் காண்கிறேன் தெரியுமா? பகவான் புத்தருடைய திறமையையே காண்கிறேன். உனக்கு இத்தகைய குரலைக் கொடுத்த புத்தர் பெருமானைப் போற்றுகிறேன். உனக்கு உடலழகைக் கொடுத்த புத்தர் பெருமானின் திறமையை வியக்கிறேன். அழகும் குரலும், இறைவனுடையவை. அவற்றை உரிமைகோரி நீ பேசும் வெறும் ஆணவமே உன்னுடையது.

கணிகை : பிட்சுவே! பேசுவதை நிறுத்துங்கள். ஆணவமாம், ஆணவம்! எந்த ஆணவத்தை என்னிடம் நீங்கள் கண்டுவிட்டீர்கள்? அழகும், குரலினிமையும் எனக்குச் சொந்தமில்லை என்கிறீர்கள் நீங்கள். அவை எனக்கே சொந்தம், நானே என்னிடம் திறமையாக வளர்த்துக் கொண்டவை என்கிறேன் நான்.

பிட்சு : இல்லை! கண்டிப்பாக இல்லை. அழகும், குரலும், திறமையும் நம்மிடம் இருப்பதாகப் பேசும் ஆணவங்கள் மட்டுமே நமக்குச் சொந்தமாகிறவை. வாழ்வில் நாமே இதைப் புரிந்து கொள்வதற்கு ஒரு சந்தர்ப்பம் வராமற் போகாது. மறந்துவிடாதே.

கணிகை : தயைகூர்ந்து நான் சொல்லுவதைச் சிறிது கேளுங்கள் அடிகளே! செந்தழல் நிறமேனியும், கள்ளங் கபடற்ற—புன்முறுவல் திகழும் முகமும், ஞானச்சுடர் ஒளிரும் கண்களுமாக நீங்கள் இருக்கிறீர்களே—உங்களுடைய இந்த அழகு உங்களுக்குச் சொந்தம் இல்லையா? உங்களுடைய இந்த அழகைப் போன்றது தானே என்னுடைய அழகும்? என் அழகை மட்டும் ஏன் வெறுக்கிறீர்கள்? என்னுடைய இந்த விழிகளின் தாபம் நிறைந்த பார்வை உங்களை ஒன்றும் செய்யவில்லையா? என்னுடைய இந்தக் குரலின் இனிமை உங்கள் இதயத்தில் புகுந்து ஊடுருவவில்லையா? தயவு செய்து மறுமொழி கூறுங்கள் சுவாமி...?

பிட்சு : நான் கூறுவதற்கு எதுவும் இல்லை பெண்ணே! ஒரு துறவியின் பார்வையில் அழகுகள் படும்விதமே வேறு. எல்லா அழகுகளுக்கும் மூலமாக இறைவனைத் தேடுகிறவர்கள் நாங்கள். இறைவனை மறந்து அழகுகளைப் பார்க்க எங்களுக்குத் தெரியாது. எல்லா அழகுமே எங்களுக்கு இறைவன்தான்.

கணிகை : அதிருக்கட்டும்! அடிகளே! துன்பப்படுகிறவர்களுக்கு உதவி செய்து அவர்களுடைய துன்பத்தைப் போக்குவதுதானே உங்கள் சமயத்தின் இலட்சியம்...?

பிட்சு : ஆம்! அதையேன் நீ இப்படித் தூண்டித் தூண்டி விஞவுகிருய் என்று தெரியவில்லையே? இதன் உட் பொருள்தான் என்ன?

கணிகை : (கலகலவென மயக்கமூட்டுகிற விதத்தில் சிரித்த படி) உங்களுடைய கடைக்கண் என்பக்கமாகத் திரும்ப வேண்டும் சுவாமி! உங்கள் கருணைக்காக நான் துன்பப் பட்டுத் தவித்கிறேன்—என்பதை நீங்கள் உணர வில்லையா...இன்னும்?

பிட்சு : உன்மேல் எப்போது கருணை செலுத்த வேண்டும்? உன்னை எப்போது கடைக்கண் பார்க்கவேண்டும் என்ப தெல்லாம் எனக்குத் தெரியும்.

கணிகை: எப்போது என்பதை இப்போதேசொல்வீர்களா...?

பிட்சு : சொல்லமாட்டேன்! ஆனல் எப்போது மறுபடி உன்னைத் தேடி வரவேண்டுமோ அப்போது தாமாகவே என் கால்கள் உன்னைத் தேடிவரும்.

கணிகை : விரும்புகிற போது செய்யாத உதவியை எப்போதாவது வந்து செய்வதில் என்ன பயன் இருக்க முடியும்?

பிட்சு : விரும்புகிறபோது உதவி செய்வதைவிடத் தேவைப் படுகிற போது உதவி செய்வதுதான் நல்லதென்று நான் கருதுகிறேன் அம்மா!

கணிகை : சரி உங்கள் விருப்பம்.

பிட்சு : என் விருப்பமல்ல...இறைவனின் விருப்பம்-என்று சொல்லு பெண்ணே! நல்லது! விடைபெறுகிறேன். உரியகாலத்தில் மறுபடி உன்னைச் சந்திப்பேன்.

(திரை)

## காட்சி 5

### இடம்:—இந்திரவிகாரம்

(புத்த பிட்சு மறுபடி தம்முடைய தங்கும் இடமாகிய இந்திர விகாரத்திற்குத் திரும்புகிருர்—மறுபடி முதற்

காட்சியின் தொடக்கத்தில் இருந்தாற்போன்ற ஒலிகள் புத்தம் சரணம் கச்சாமி, தர்மம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி—என்ற தவக்குரல்கள்—காலையில் சந்தித்தது போல் பிட்சுக்கள் இருவரும் சந்தித்துக் கொள்கிறார்கள்.)

மு. பிட்சு : என்ன...? இன்று அநுபவபாடத்தைக் கற்பதற்காக எங்கெங்கெல்லாம் போய்விட்டு வந்தீர்கள்? யார் யாரைச் சந்தித்தீர்கள்...? என்னென்ன அநுபவங்களைப் பெற்று வந்தீர்கள்?

இ. பிட்சு : இரண்டோர் இடங்களுக்குச் சென்றேன்—இரண்டோர் அநுபவப் பாடங்களே கிடைத்தன. அந்த அளவில் அவை என் சிந்தனையை வளர்ப்பவை ஆகும். இன்னும் நிறையக் கற்க வேண்டியவை மீதமிருக்கின்றன.

மு. பிட்சு : துக்கம், துக்க உற்பத்தி, இரண்டையும் அநுபவங்கள் மூலமாகக் கண்டு உணர்ந்து தெளிந்த பின்பே துக்க நிவாரணம் விளைய முடியுமென்பதுதான் நமது புத்த சமயம். துக்க நிவாரண மார்க்கத்தைப் புரிந்து கொண்ட முழுத் துறவிதான்—கோமுகிப் பொய்கையைத் தேடிச் செல்ல முடியும்.

இ. பிட்சு : அடிகளே! இன்று நான் நகருக்குள் புறப்பட்டுச் சென்றபின் வாழ்வின் மெய்யுணர்வைச் சரியாக அடையாத ஓர் இளைஞனையும் சந்தித்தேன். ஓர் இளம் பெண்ணையும் சந்தித்தேன். இளைஞனோ சார்வாக மதத்தைச் சார்ந்தவன். யுவதியோ கணிகை. உலக அறவியின் பொது அம்பலத்திலே இவ்வளவு பசிப்பிணியாளர்கள் நிரம்பிக் கிடக்கும்போது, நீங்கள் புத்த ஞாயிற்றின் பெருமையைப் பற்றிக் கூறுவதிலே பொருளில்லை என்றான் அவன். "புத்த பிட்சுவாகிய நீங்கள் உங்களுடைய சமயதர்மப்படி பிறருடைய துன்பத்தைத் தீர்த்துவைக்கக் கடமைப்பட்டிருக்கிறீர்கள்.

எனவே என்னுடைய துன்பமாகிய இந்தத் தாபத்தையும் தீர்த்தருளுங்கள்'' என்றாள் யுவதி.

மு. பிட்சு : பாவம்! பாவம்! அறியாமை.

இ. பிட்சு : தன்னுடைய அழகையும், குரல் இனிமையையும் நான் கவனிக்க வேண்டுமென்று கெஞ்சினாள் கணிகை யுவதி. கருணை செலுத்துவதைவிட ஒரு துறவிக்கு வேறு என்ன கடமை என்று சிரித்தபடி என்னை ஒரு கேள்வியும் கேட்டாள்.

மு. பிட்சு : இப்படிப்பட்ட கேள்விகள் எல்லாம் புத்த தர்மத்தையே உணராத கேள்விகள். (பாட்டாகவே கீழ் வருவதை (சங்கராபரணத்தில் பாடுகிறார்.)

இசைப்பாட்டு (3)

''ஆதி அமலன்
போதி மாதவன்
புண்ணிய சீலன்
மாதவச் செல்வன்
மணிமுடி துறந்தேன்
நாதன் நல்லவன்
நலிவுகள் தீர்ப்பவன்
பாத பங்கயம்
பணியப் பணிய
வேதனை தீரும்
விந்தைகள் நிகழும்''

என்பதல்லவா புத்த தத்துவம்? இதைப் புரிந்து கொள்ளாமல் இருப்பவர் பற்றி என்ன சொல்வது?

இ. பிட்சு : போதிமாதவனுடைய புதிய தத்துவத்தை உணராதவர்கள் நம் பூம்புகாரில் நிறைய இருக்கிறார்கள். அவர்களையெல்லாம் அறிவுறுத்திச் செம்மை செய்வதற்கென்று நான் இந்த நகரத்தின் வீதிகளில் இன்னும் நிறைய அலைந்து திரிய வேண்டியிருக்கிறது.

அலைந்து திரியாமல் இங்கு எதையும் சாதிக்க முடியாது போலிருக்கிறதே?

மு. பிட்சு: சுடச் சுடத்தான் தங்கம் ஒளி பெருகி மெருகேறும். தேய்க்கத் தேய்க்கத்தான் சந்தனம் மணம் பெருகி நிற்கும். வருட வருடத்தான் யாழ் இன்பம் பயக்கும். உலக அநுபவங்களில் தோய்ந்து தோய்ந்து பின்பு அவற்றிலிருந்து விடுபட விடுபடத்தான் பரி நிர்வாணம்—என்ற நம் சமயத்தின் மிக உயர்ந்த முக்தியை நாம் அடைய முடியும்! அந்த மகா நிர்வாணத்தை அடையும்போது எண்ணற்ற புத்தர்களின் புகழ்மிக்க பரம்பரையில் நாமும் ஒருவராகிவிடுகிறோம். நாம் அலைந்து திரிவது எல்லாம் அத்தகைய உயர்ந்த நிலைக்கு நம்மைக் கொண்டு செல்லப் பயன்படவேண்டும், ஒரு பிட்சுவுக்கு நல்ல சங்கம்—அதாவது ஞானவான்களின் தொடர்பு—வேண்டும், ஞானவான்களின் தொடர்பாகிய சங்கமும் தர்மமும் விளங்கிவிட்டால் புத்தர் பிரானின் சரணங்களை அடைவது மிகமிகச் சுலபம். புத்தம் சரணம் கச்சாமி, தர்மம் சரணம்கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி—என்றல்லவா நாம் சொல்லுகிறோம்?

இ. பிட்சு: ஆம்! ஆம்! அவ்வாறுதான் சொல்லிவருகிறோம்! இன்றிரவு நான் இந்தப் பூம்புகாரின் புறநகரிலுள்ள சக்கரவாளக் கோட்டத்திற்குச் செல்லலாம் என்றிருக்கிறேன் அடிகளே!

மு. பிட்சு: சக்கரவாளக் கோட்டத்திற்கா-? இரவு நேரத்தில் அங்கே போவது மிகவும் பயங்கரமான காரியமாயிற்றே? பேய்களும், பூதங்களும், காபாலிகர்களும், உலாவும் சுடுகாட்டிற்கு இரவிலா செல்லப் போகின்றீர்கள்?

இ. பிட்சு: என்ன செய்வது? சத்தியவான் ஆகிய ஒரு பிட்சு பயத்தையும் அறவே போக்கிக் கொண்டாக வேண்டுமே?

மு. பிட்சு: சரி! உங்கள் விருப்பம்! அப்படியே போய் வாருங்கள்.

இ. பிட்சு: வருகிறேன் அடிகளே! மீண்டும் பார்ப்போம்.

(திரை)

## காட்சி-6

### இடம்:—சக்கரவாளக்கோட்டம்

(காவிரிப்பூம்பட்டினத்தின் புறநகராகிய - அடர்ந்த காடு-நரிகளின் ஊளை—ஆந்தையின் அலறல் ஒலி-விட்டு விட்டு நீர்த்தவளைகளின் குரல் - சில்வண்டுகளின் ரீங்காரம்-பயங்கரமான சூழல்-சக்கரவாளக் கோட்டத்தின் காட்டுக்குள்ளே இளம் வயதுப் புத்த பிட்சு இத்தகைய சூழ்நிலையில் நுழைகிறார்)

பிட்சு: (தனக்குள்) என் நண்பராகிய இந்திர விகாரத்துப் பிட்சு கூறியது சரியாகத்தான் இருக்கிறது! இரவு நேரத்தில் இந்தச் சக்ரவாளக் கோட்டம் இவ்வளவு தனிமையாகவும், இவ்வளவு பயங்கரமாகவும் இருக்கும் என்று முன்பே தெரியாமல் போய்விட்டதே? இங்கே கூகையும் கோட்டானும், ஆந்தையும் நரியும் அலறுகிற ஒலிகளே நடந்து வருகிறவனைப் பயமுறுத்துகின்ற தன்மையுடையவைகளாக ஒலிக்கின்றனவே! பிணந் தின்னும் நரிகளையும் கூகைகளையும் கோட்டான்களையும் தவிர இங்கு வேறெவரையும் சந்திக்க முடியாது போலிருக்கிறதே...ஆ...அதோ கழுத்தில் எலும்புகளும், மண்டையோடுகளும், நிறைந்த கபாலமாலை அணிந்து, சடையும் முடியுமாக ஒரு முரட்டு மனிதன் எதிரிலே வருகிறானே...? (தவளை, ஆந்தை, நரிகளின் ஒலிகள் இடையிடையே ஒலிக்கின்றன)

காபாலிகன்: யாரது...? இந்த நள்ளிரவு வேளையில் இந்தச் சுடுகாட்டுக் கோட்டத்திற்குள் தைரியமாக நுழைய உனக்கு எப்படி மனம் வந்தது? இது மனிதர்கள் அழியும்

இடம் என்பதை நீ மறந்துவிட்டாயா? அழிந்தபின் நுழையுமிடத்தில், நுழைந்தபின் அழியவந்த நீ யார்?

பிட்சு: நான்தான் புத்தபிட்சு! ஐயா கபாலிகரே! தைரியம் என்பது மனத்தைப் பொறுத்த செய்தி. மனிதர்கள் அழிந்த பின்பு வரக்கூடிய இடத்திற்கு அழியும் முன்பே வந்து திரும்பக் கூடாதென்று உனக்கு யார் சொன்னது?

காபா: நிறுத்து உன் பேச்சை! எலும்பும், தோலுமாக நோஞ்சான் ஆளாக வந்திருக்கிற உனக்கு இப்படித் திமிரான பேச்சுக் கூடாது. நீ ஒரு காபாலிகனுடைய கையில் சாக விரும்பமாட்டாய் என்று நினைக்கிறேன். மரியாதையாக இங்கிருந்து திரும்பிப் போய்விடு!

பிட்சு: நான் எலும்பும், தோலுமாக நோஞ்சானாக இருப்பதாய்க் கேலி செய்கிறீர்கள் காபாலிகரே! ஆனால் வலிமையாக இருப்பதற்கு அடையாளம் பூதாகாரணமாகத் தோன்றுவது என்பதல்ல. உடலின் வலிமையை விட மனத்தின் வலிமையைப் பெரிதாக மதிக்கிறேன் நான். அது சரி...? காபாலிகரே! இந்தச் சுடுகாட்டுக் கோட்டத்தில் உங்கள் இனத்தவராகிய காபாலிகர்கள் சேர்ந்து வசிக்கும் வன்னிமன்றம் என்ற பகுதி எங்கே இருக்கிறது என்பதைச் சற்றே காண்பிக்க முடியுமா?

காபாலி: (குரலில் பயமும் திகைப்பும் தெரிய) வன்னி மன்றத்திற்கா வழி கேட்கிறாய்? உன்னைப் போன்றவர்கள் அங்கே போனால் திரும்ப முடியாது புத்த பிட்சுவே! அங்கிருப்பவர்களும் இப்படி என்னைப்போல் சாதுவானவர்களாகவோ நல்லவர்களாகவோ இருப்பார்கள் என்று எதிர்பார்க்காதே! அவர்கள் அனைவரும் முன் கோபக்காரர்களாக இருப்பார்கள். அவர்களிடம் இருந்து தப்பி நல்லபெயரெடுத்து உயிரோடு வெளியே வருவது என்பது இயலாத காரியம். எனவே நீர் வன்னி மன்றத்திற்குப் போகிற எண்ணத்தைக் உடனே கைவிடுவது நல்லது என்பது என் அபிப்பிராயம்.

பிட்சு: காபாலிகரே! என் உயிரைப் பற்றிக் கவலை வேண்டாம். ஒரு துறவிக்கு-எதையும்-எந்த நிலையிலும் பிறருக்கு விட்டுக்கொடுக்க வேண்டுமென்ற நிலைதான் உண்மை நிலை. வன்னி மன்றத்திலும் இந்தச் சக்கர வாளக் கோட்டத்திலும் உள்ள எல்லா இடங்களிலும், சுற்றிப்பார்க்க வேண்டுமென்றுதானே நான் இங்கு வந்திருக்கிறேன்.

காபாலி: சுற்றிப்பார்ப்பதைப் பற்றி எனக்கு எதுவும் மறுப்பு இல்லை! ஆனால் சுடுகாட்டுக் கோட்டத்தின் எல்லைக்குள் கபாலிக சமயத்தை எதிர்த்து நீ எவரிடமும் வாதிடக்கூடாது. நான் சொல்லுவதையும் மீறி வாதிட்டுவிட்டால் அதன் பயனை அநுபவிக்க நேரிடலாம்.

பிட்சு: காரணமின்றி என்னைப் பயமுறுத்துகிறீர்கள்.

காபாலி: நீ கூறுவது தவறு! காரணங்களோடுதான் பயமுறுத்துகிறேன். நேரமோ நள்ளிரவு. இடமோ சுடுகாட்டுக் கோட்டம், எனவேதான் நீ கவனமாக இருக்கவேண்டுமென்கிறேன்.

பிட்சு: கவனமாக இருக்கிற பொறுப்பை எனக்கு விட்டு விட்டு நீங்கள் என்னை வன்னி மன்றத்திற்கு அழைத்துச் செல்லுங்கள்.

காபாலி: சரி! வாருங்கள் போகலாம்.

(இருவரும் சிறிது தொலைவு நடக்கின்றனர்)

(பறவைகளின் ஒலி-ஆந்தை அலறல்-நரி ஊளை.)

காபாலி: இதோ வன்னிமன்றம் வந்துவிட்டது.

பிட்சு: சுற்றிப் பார்க்கலாம். நீங்களே வழிகாட்டி அழைத்துச் செல்லுங்கள். (சிரித்தபடி) உங்கள் சமயத்தவர்களை எல்லாம் தனியே சந்தித்து எதிர்கொள்ளவே பயமாக இருக்கிறது. அதனால் உங்கள் துணை தேவை.

காபாலி; நீயோ புத்த பிட்சு! உனக்கு உயிர்ப்பயம்என்பது கூடாது. பயப்படாமல் என்னோடு வா! எல்லாம் சுற்றிக் காண்பிக்கிறேன்.

பிட்சு: எல்லாம் சுற்றிப் பார்ப்பதற்குள் விடிந்துவிடும் போலிருக்கிறதே? இதைச் சுற்றிப் பார்க்காமலே இந்த நகரத்தில் இவ்வளவு நாள் நான் துறவறம் மேற்கொண்டு நடத்தியிருக்கிறேன் என்பது விந்தையாகத்தான் இருக்கிறது. வாழ்க்கையில் அநுபவச் செல்வங்களைச் சேர்ப்பதற்கே பல ஆண்டுகள் வேண்டுமென்றல்லவா தெரிகிறது. அறிவின் முதிர்ச்சியே முக்தி.

காபாலி: (மிகவும் கடுமையான குரலில்) எங்களுடைய சமயத்தில் அப்படி எல்லாம் இல்லை; அதை மறுத்து எல்லாவற்றையும் அழிப்பதும் ஒழிப்பதும்தான் எங்கள் சமயம். ஹஹ் ஹ ஹஹா......

(இடி இடியென்று கோரமாகச் சிரிக்கிருன்)

(திரை)

## காட்சி-7

### இடம்:-இந்திர விகாரம்

(நாட்கள் வாரங்களாகின்றன. வாரங்கள் மாதங்களாகின்றன. மாதங்கள் ஆண்டுகளாகின்றன. பூம்புகாரில் இந்திரவிழாக்கள் ஒவ்வொன்ருக வந்து போகின்றன. வேனிற் காலம் மழைக்காலம் என்று பருவ காலங்களும் வந்து வந்து போகின்றன. இந்திர விகாரத்து இளம் பிட்சு-வயது முதிர்ந்த பிட்சுவிடம் இருந்து இன்னும் கோமுகி தரிசனத்திற்கான அனுமதியைப் பெறவில்லை. ஒரு பூம்புகார் நகரத்துப் பிட்சுவின் வாழ்வில் பெறற்கரிய பாக்கியமாகக் கருதப்படும் மணிப்பல்லவ யாத்திரையும் கோமுகிப் பொய்கையில் நீராடும் பாக்கியமும் இன்னும் அவருக்குக் கிடைக்கவே இல்லை. இந்த நிலையில் மறுபடியும்

ஓர் இந்திர விழாவின் தொடக்க நாளன்று அவருக்கும் முதிய பிட்சுவுக்கும் இந்திர விகாரத்தில் இடையில் கீழ்வரும் விவாதம் தொடங்கி நடைபெறுகிறது ]

இளம். பி: அடிகளே! இன்னும் என்மேல் மனம் இரங்கவில்லையா? முதன் முதலாக நான் தங்களிடம் மணிபல்லவ யாத்திரைக்கு அனுமதி கொடுத்தருளுமாறு வேண்டிப் பல ஆண்டுகள் ஆகிவிட்டன. அநுபவப் பாடங்களை முற்றுகக் கற்றுத் தெரிந்து கொள்ளச் சொன்னீர்கள். நானும் இந்த நகரம் முழுவதும் ஓடியாடிக் கற்று வந்தேன். துக்கம், துக்க நிவாரணம், துக்க உற்பத்தி ஆகிய நம் மதக் கொள்கைகளை ஆழ்ந்து பயின்று மகா நிர்வாணகதிக்கு மனத்தை உயர்த்திக்கொள்ள வேண்டும் என்றீர்கள். அவ்வளவும் செய்தேன். ஆண்டுகள் பல ஆகிவிட்டன. இன்னும் எனக்கு நீங்கள் அருள் செய்யவில்லை.

முதிய. பி: அருள் செய்ய வேண்டிய காலம் நெருங்கி விட்டதென்று நினைக்கிறேன். இந்திர விழாமுடிந்ததும் தொடர்ந்து உடனே வருகிற வைகாசி விசாகத்தின் போது நீங்கள் மணிபல்லவ யாத்திரைக்கு பாத்திரமாகி விடுவீர்கள் என்றெண்ணுகிறேன், தயைகூர்ந்து அதுவரை பொறுமையாக இருங்கள்.

இளம். பி: தங்கள் கட்டளையை இனியும் நான் மீற மாட்டேன் ஐயா! நீங்கள் பொறுத்திருக்கச் சொல்லும் காலம்வரை பொறுத்திருப்பேன். எவ்வளவு காலமானலும் பொறுத்திருப்பேன். தங்கள் கட்டளையை மேற்கொண்டு இந்த நகரின் நாளங்காடியிலுள்ள சமய வாதிகளைத் தேடிச் சென்று வாதம் புரிந்தேன். சக்கரவாளக் கோட்டத்துக் காடுகளில் நள்ளிரவு என்றும் பாராமல் அலைந்தேன். காலம் ஓடுவதையும் கணக்கிடாமல் பொறுமையாகக் காத்திருந்தேன். இன்னும் என்னைப் பொறுமையாக இருக்கச் சொல்கிறீர்களே...?

முதிய. பி: இத்தனை ஆண்டுக்காலம் சோதனைகளைத் தாங்கிப் பொறுமையாக இருந்தவர்-காரியம் கைகூடுகிற காலத்தில் பொறுமை இழந்துவிடக் கூடாது. கவனம். மறுபடி நகரில் போய்ப் பார்க்க வேண்டும் நீங்கள்!

இளம். பி: இந்திரவிழாவினுல் பரபரப்பும் கோலாகலமுமாக இருக்கும் நகரில் சென்ருல் - இதுவரை கிடைத்த அநுபவங்களுக்குச் சிகரங்கள் போன்ற அநுபவங்கள் கிடைத்தாலும் கிடைக்கலாம். ஆனுல் சலிப்படையாது இன்னும் தாங்கள் இட்ட கட்டளையை நான் சிரமேற் கொள்ளுகிறேன். உடனே சென்று காண்கிறேன்.

முதிய. பி: வெற்றிகரமாகப் போய் வாருங்கள். போதி மாதவன் கருணையினுல் உங்கள் வாழ்வில் புத்த ஞாயிறு உதயமாகட்டும் என வாழ்த்துகிறேன்.

இளம். பி: வணங்குகிறேன். விடை தாருங்கள்.

முதிய. பி. மங்கலமே விளைக! கருணை பெருகுக!

(திரை)

## காட்சி-8

### இடம்:—இந்திரவிழா நடக்கும் பகுதி

(விழாப் பரபரப்பு-பலவகையான வாத்தியங்களின் கலப்பு ஒலிகள். பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடியிருக்கும் கூட்டத்தின் பேச்சுக்குரல்கள் - சந்தடி, இந்திரவிழாக் கூட்டம். 'நான் இதற்கு முன் எந்த இந்திர விழாவின்போதும் இவ்வளவு கூட்டத்தைக் கண்டதில்லை' - என்று இடையிடையே மக்கள் ஒருவருக்கொருவர் கூறிக்கொள்ளும் ஒலிகள் - இதனிடையே பிட்சு நாளங்காடிக்கு வருகிருர். சமயவாதிகள் ஒருவருக்கொருவர் பலத்த குரல்களில் வாதிட்டுக் கொண்டிருக்கிருர்கள். கூட்டத்தில் ஓரிடத்தில் நாடோடிப் பாணர்கள் இந்திரவிழாவையும் சோழர் தலைநகரையும், புகழ்ந்து பாடுகிருர்கள்.)

இசைப்பாட்டு (4)

*(கும்மி-மெட்டு-முப்பது கோடி முகமுடையாள் என்ற பாரதியார் பாடல் போல்)*

இந்திரவிழா வந்தது - இந்திரவிழா வந்தது
சந்திர சூரியர் தேடிவந்து காண்கிற
சுந்தரச் சோழர் தலைநகரிலே
இந்திரவிழா வந்தது–இந்திரவிழா வந்தது.

சரணங்கள்

பொன்னும் மணியும் முத்தும் பவழமும்
மன்னும் சோழர் தலைநகரம்–கலைநகரம்
அன்றும் இன்றும் என்றும் பெருநகரம்
ஆடவர் பெண்டிர் அழகிய திருநகரம்
யவனர் சோனகர் சீனர் கலிங்கர்
நாகர், மிசிரர், மிலேச்சர், மேதினி
நாற்றிசை மீதிலும் உள்ளவர் அனைவரும்
கவனம் கொள்ளும் நவவளம் நிறைநகரம்
ஆடல் பாடல் முதலாம் கலைகளெல்லாம்
அதிரூப சுந்தரிகள் ஜதிதாளமிட–மாலை
சூடும் அரங்கங்கள் பலகொண்ட சாம்ராஜயம்
சூதுவாதுகள் கற்றறியா நன்மக்கள் சாம்ராஜ்யம்
காலையும் மாலையும் நண்பகலும் மகிழ்ந்திட
இந்திரவிழா வந்தது–இந்திரவிழா வந்தது
சந்திர சூரியர் தேடி வந்து காண்கிற
சுந்தரச் சோழர் தம் தலைநகரில்
இந்திரவிழா வந்தது வந்தது–வந்ததுவே.

*இளம். பி :* *ஆகா! இந்திரவிழா வந்திருப்பதில் இந்த நாடோடிப் பாடகனுக்குக் கூட எத்தனை பெருமிதம்? முற்றும் துறந்த முனிவனாகிய நானே ஒவ்வோர் இந்திர விழா வரும்போதும் அதையடுத்துத் தொடர்ந்து வரும் வைகாசி விசாகத்தையும்—விசாகத்தின்போது நான் மணிபல்லவ யாத்திரை சென்று கோமுகிப் பொய்கை*

யைத் தரிசனம் செய்ய வேண்டும் என்பதையும் நினைவு கூராமல் இருப்பதில்லையே? அப்படி இருக்கும்போது பாடிப் பரிசில் பெறுகிற இந்தப் பாணர் கூட்டத்துக்குப் பலர்முன் பாடிப் பொருளடைய வாய்ப்புத்தரும் இந்திரவிழா பெருமிதத்தைத் தருவதில் வியப்பென்ன?

(இந்த வேளையில் —குதிரைகள் பூட்டிய ஒரு சிறியதேர் பிட்சுவுக்கு மிக அருகில் வந்து நிற்கிறது—தேர் வந்து நிற்கும் ஒலி—அதிலிருந்து இறங்கி வந்தவர் பெருஞ் செல்வர்போல் தோன்றுகிறார்—அவர் இளம்பிட்சுவின் அருகே வந்து பேசுகிறார்)

செல்வ : ஐயா! இளம் புத்தபிட்சுவே! இத்தனை இளம் பருவத்தில் இத்தனை அழகான உடலை ஏன் துறவு என்ற கொடுமைக்கு இலக்காக்கிக் கொண்டிருக்கிறீர்கள்? உம்மைப்போல் அழகுள்ள ஒரு வாலிபரை நான் தேடிக் கொண்டிருக்கிறேன்.

பிட்சு : எதற்காகவோ...?

செல்வர் : என்னுடைய செல்வங்களுக்கு அதிபதியாக்கி மகிழ்வதற்காக! நான் மிகப்பெரிய செல்வர்களுக்கு இந்நகரத்து அரசர் வழங்குகிற எட்டி, காவிதி, போன்ற பட்டங்களை எல்லாம் பெற்றவன். எனக்கு ஒரே மகள்தான் வாரிசு. ஆண்மக்கள் கிடையாது. என் செல்வங்களை எல்லாம் கட்டி ஆளும் வல்லமை வாய்ந்தவன் யாரோ அவன்தான்—எனது மற்றொரு செல்வமாகிய மகளையும் கட்டி ஆளவேண்டுமென்பது என் விருப்பம்.

பிட்சு : புத்தர் பெருமான் உங்கள் விருப்பம் நிறைவேறக் கருணை புரியட்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

செல்வர் : புத்தர் பெருமான் கருணை புரிவது ஒருபுறம் இருக்கட்டும். நீங்கள் கருணை புரிய இணங்குவீர்களா என்பதை முதலில் எனக்குத் தெரிவியுங்கள்.

பிட்சு : நான் எந்தவிதமான கருணையை உங்களுக்குப் புரிய முடியும் என்று நினைக்கிறீர்கள்?

செல்வர் : என்னுடைய மனத்தில் இந்த விநாடியில் இருக்கும் ஆசையின்படி எனக்கு வேண்டிய எல்லாவிதமான கருணைகளையும் நீங்கள்தான் எனக்குத் தரமுடியும் என்று தோன்றுகிறது.

பிட்சு : ஒரு செல்வமும் இல்லாத என்னைப்போன்ற துறவி ஒருவன் எல்லாச் செல்வமுமுள்ள உங்களைப் போன்ற ஒருவருக்கு என்ன உதவி செய்ய முடியுமென்பதுதான் எனக்குப் புரியவில்லை ஐயா?

செல்வர் : என்னோடு சற்றே தனியாக வருவீர்களானல் சொல்வேன், வருகிறீர்களா?

(பிட்சு தயங்குகிறர்)

செல்வர் : பிட்சுவே! தயக்கம் வேண்டாம். வாருங்கள். உங்களுக்கு நான் ஒன்றும் தீங்கு செய்யப் போவதில்லை. தேரில் ஏறுங்கள் சொல்கிறேன்.

பிட்சு : சரி...வருகிறேன். ஆனல் எந்த நிபந்தனைக்கும் இணங்காமல் வருகிறேன். போகலாம் வாருங்கள்.

(இருவரும் தேரில் ஏறியபின்)

செல்வர் : தேர்ப்பாகா! தேரை எட்டிகாவலர்கள் வசிக்கும் நமது செல்வச் செழிப்பு மிக்க தெருவிற்குச் செலுத்து. தெருவில் இந்திரவிழாக் கூட்டம் அதிகமாக இருக்கும். கவனமாகச் செல்.

(தேர் விரைகிறது)

செல்வர் : அதோ தெரிகிறதே...ஏழடுக்கு மாடிவீடு, அது தான் என்னுடையது, பாருங்கள்.

பிட்சு : இருக்கட்டும், என்னை அழைத்த காரியத்தை இன்னும் நீங்கள் கூறவே இல்லையே ஐயா!

செல்வர் : சொல்கிறேன். ஆனால் எக்காரணத்தைக் கொண்டும் என்மேல் நீங்கள் இப்போது சிறிதும் கோபித்துக் கொள்ளக்கூடாது.

பிட்சு : உங்கள் விருப்பத்தை நீங்கள் வெளியிடப் போகிறீர்கள்! அதில் கோபப்பட என்ன இருக்கிறது.

செல்வர் : நீங்கள் உடனே இந்தப் பிட்சுக் கோலத்தை நீத்துத் துறவறத்தைக் கைவிட்டு விட்டு என் வேண்டுகோளை ஏற்று என் அருமை மகளைத் திருமணம் புரிந்து கொள்ள வேண்டும். இதுவே என் விருப்பம். இந்த வேண்டுகோளை நான் விடுப்பதற்குக் காரணம் என் மகளை ஏற்பதற்குப் பொருத்தமான சாமுத்ரிகா லட்சணங்களும், என்னுடைய பெருஞ்செல்வத்தை வீணாக்கிவிடாமல் கட்டிக் காப்பதற்குரிய அடக்கமும் உடையவர் நீர் ஒருவரே என்பதுதான்.

பிட்சு : (கடுமையான குரலில்) ஐயா! உங்களுக்கு மிகவும் புண்ணியமாய்ப் போகிறது. தயவு செய்து தேரை உடனே நிறுத்தச் செய்யுங்கள். நான் கீழே இறங்கிக் கொள்கிறேன்.

செல்வர் : (பரபரப்புற்ற குரலில்) ஏன்...? ஏன்...? என்ன நடந்தது? எதற்காக இப்போது நீங்கள் தேரிலிருந்து கீழே இறங்க வேண்டும்.?

பிட்சு : அங்கேயே இந்த விருப்பத்தை என்னிடம் கூறியிருந்தீர்களானால் நான் உங்களோடு புறப்பட்டு வந்தே இருக்க மாட்டேன். உங்கள் விருப்பத்தை என்னைப்போல் ஒரு புத்த பிட்சு பூர்த்தி செய்ய முடியாது. பூர்த்தி செய்யவும் கூடாது.

செல்வர் : தேர்ப்பாகா! தேரை ஒரு விநாடி நிறுத்து.

(தேர் நிற்கிறது)

செல்வர் : இறங்குவதற்கு முன்னால் மீண்டும் ஒரு முறை நன்றாகச் சிந்தித்துக் கொள்ளுங்கள், என் விருப்பத்தை

நிறைவேற்றுவதனுல் உங்களுக்கும் பெரும் பயன் இருக்கும்.

பிட்சு : (கீழே இறங்கி நின்று கொண்டு) ஐயா எட்டிப் பட்டம் பெற்ற செல்வரே! இந்தப் பேச்சில் இரண்டாவது சிந்தனைக்கு இடமே கிடையாது. போய் வாருங்கள். உயிர்களின் துக்க நிவாரணத்துக்கு வழி தேடுவதை விட ஒரு புத்த பிட்சுவின் வாழ்விற்குப் பெரும் பயன் தரக்கூடியது வேறெதுவுமே இருக்க முடியாது.

செல்வர் : அப்புறம் உங்கள் விருப்பம். வருகிறேன்.

பிட்சு : தாராளமாகப் போய் வாருங்கள்.

(திரை)

## காட்சி-9

### இடம்:—நாளங்காடி

(புத்த பிட்சு மறுபடி நாளங்காடிக்கு வருகிருர்—மறுபடி நாளங்காடியின் ஒலிகள் அவரைச் சூழ்கின்றன)

புத்த பி : (தமக்குள்) நல்ல வேளையாகத் தப்பிப் பிழைத்தேன். என்னுடைய இலட்சியம் நிறைவேறி நான் மணிபல்லவ யாத்திரையை மேற்கொள்ள இருக்கும் இந்தச் சமயத்தில் எனக்கு இப்படி ஒரு சோதனையா? யாருக்கு வேண்டும் செல்வமும் திருமணமும்?

(இப்படி அவர் சிந்தித்தபடியே நடக்கும்போதில் வேறு ஓர் இளம் பிட்சு எதிரே வருகிருர்)

வாலிப பி: ஐயா! தங்களுக்கு என்னை நினைவிருக்கிறதா? யோசித்துச் சொல்லுங்கள்.

பிட்சு: எங்கோ நீண்டகாலத்துக்கு முன்பாகப் பார்த்த நினைவிருக்கிறது. ஆனல் எங்கே எப்போது என்பது தான் நினைவில்லை.

வாலிப: சில பல ஆண்டுகளுக்கு முன் ஒரு முற்பகல் வேளையில் இதே நாளங்காடியில்-உருண்டு திரண்ட தோள்

களும், பருத்த உடலுமாக ஓர் இளைஞன்-உங்களைச் சந்தித்துக் கேள்விகள் கேட்டது நினைவிருக்கிறதா? (பழையவற்றைநினை கூறுவதற்கு ஒத்த வகையில்பின்னணி)

பிட்சு: ஆம்! இப்போது நன்றாக ஞாபகம் வருகிறது. புத்த ஞாயிறு தோன்றும் காலத்தில் உலகத்துக்கு என்ன நன்மைகள் கிடைக்கும் என்று கேள்வி கேட்டாய். பசியும், பிணியும் தீர்ந்து நாடெங்கும் வசியும் வளமும் சுரக்கும் என்று நான் மறுமொழி கூறினேன். உடனே நீ கோபத்தோடு என்னை உலக அறவியின் பொது அம்பலத்திற்கு அழைத்துச் சென்றாய். அங்கே கூனும் குருடும், முடமும் நொண்டியுமாக அடைபட்டுக் கிடப் பவர்களை எனக்குக் காண்பித்து, ''உங்கள் புத்த ஞாயிறு ஏன் இவர்களுடைய வாழ்வில் எல்லாம் வசியும் வளமும், சுரக்கச் செய்யவில்லை?'' என்று கடுங்கோபத் தோடு கேட்டாய்!

வாலிப: நான் அப்படிக் கேட்ட உடனே நீங்கள் என் னோடு விவாதத்தைத் தொடங்கினீர்கள். நானும் பதிலுக்கு உங்களோடு விவாதித்தேன். 'விவாதம் செய்வது சரி! ஆனால் என்னோடு விவாதம் செய்வதற் கான முறையில் நீ என்னென்ன நூல்களைக் கற்றிருக் கிறாய்?' என்று கேட்டீர்கள். அந்தக் கேள்வியை என்னை நோக்கி நீங்கள் கேட்டபோது சுற்றி இருந்தவர்கள் ஏளனமாகச் சிரித்தார்கள்.

(பின்னணியில் அதே சிரிப்பொலி)

பிட்சு: ஆம் நினைவிருக்கிறது! நினைவிருக்கிறது!

வாலிப: அன்று மற்றவர்கள் என்னை நோக்கிச் சிரித்த சிரிப் பொலிதான் படிப்படியாக என்னை இன்று இவ்வாறு பிட்சுவாக மாற்றியது. நான் இப்படி மாறியதற்கு உங்களை அறிந்தோ அறியாமலோ, நீங்கள்தான் கார ணம் அடிகளே!

பிட்சு: மிக்க மகிழ்ச்சி இளைஞனே! உன்னுடைய இந்த மாற்றம் எனக்குப் பெரிதும் மகிழ்ச்சியை அளிக்கிறது. உடம்பின் வலிமையைக் காட்டுகின்ற யானையேற்றம், குதிரையேற்றம், விற்போர், மற்போர், வாட்போரில் வல்லவனாக அன்று பல ஆண்டுகளுக்கு முன் என்னெதிரே வந்து நின்றாய் நீ. இன்றோ துக்கம், துக்கோற்பத்தி, துக்க நிவாரணம், ஆகிய ஞான வித்தைகளைக் கற்ற சத்பாத்திரமாக என் முன் வந்து பிட்சுவாகி நிற்கிறாய்! என்னுடைய ஒரு கேள்வி உன்னை இப்படி ஓர் ஆன்மவீரனாக மாற்றியிருக்கிற தென்பதை அறிந்து உண்மையிலேயே நான் பெருமிதப் படுகிறேன்.

வாலிப: என் மனத்தில் இன்னும் பல தெளிவுகள் ஏற்பட வேண்டுமென்று என்னை வாழ்த்துங்கள் அடிகளே! உங்கள் வாழ்த்து என்னை வளர்க்கும்—என் அறிவைப் பெருக்கும் என்று நான் நம்புகிறேன்.

பிட்சு: புத்தர் பெருமானுடைய அருள் உனக்குப் பரிபூரணமாகக் கிடைக்கட்டும். புத்தம் சரணம் கச்சாமி, தர்மம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி. (கூடியிருந்த அனைவரும் இப்படியே கூறுகிறார்கள்)

(திரை)

## காட்சி-10

### இடம்:—நகரின் ஒரு சதுக்கம்

(வாலிபனை அனுப்பிவிட்டுப் புத்த பிட்சு தனக்குத் தானே பேசிக்கொள்கிறார்)

பிட்சு: அடடா! இத்தனை ஆண்டுகளுக்குள்தான் எவ்வளவு மாறுதல்கள்? நான் சந்தித்தவர்கள் ஒவ்வொருவரும் எப்படி எப்படியோ மாறியிருக்கிறார்கள். ஒரு காலத்தில் சிறிதும் தணியாத வெறியோடு என்னிடம் புத்த நெறியை எதிர்த்துக் கேள்விகேட்ட இந்த இளைஞன் இன்று புத்த நெறியைப் போதிக்கும் பிட்சுக்

களில் ஒருவனுகி விட்டான். விந்தையான உலகந்தான்! இந்த உலகில் வெயில் மழை ஆகிய பருவ காலங்கள் தான் மாறி மாறி வருகின்றன என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனுல் மனிதர்களும் மாறி வருகிருர்கள். ஆ... இதோ தெருக்கோடியில் ஏதோ கூட்டமாகத் தெரிகிறது. என்னவென்றுதான் போய்ப் பார்க்கலாமே?

(கூட்டத்தில் சலசலப்பு-பல குரல்கள்-அருவருப்புக் குரல்கள் 'ச்சூ' என்று வெறுத்து இரங்கும் குரல்கள்)

குரல்: வழிவிடுங்கள்! வழிவிடுங்கள்! புத்த பிட்சு வருகிருர்.

பிட்சு: யார்? என்ன? எதற்காக இந்தக் கூட்டம்?

மக்கள் (பலகுரல்கள்) பாவம் தொழுநோய் வேதனையில் நடக்க முடியாமல் விழுந்து கிடக்கிருள். எல்லாரும் தொடுவதற்குக் கூசுகிருர்கள். நோய் முற்றிவிட்டது. உடலின் பல பகுதிகள் குறைந்து குன்றிப் போய்விட்டன. முகத்தைப் பார்த்தால் இளம்வயதுப் பெண்ணென்றுதான் தெரிகிறது. ஆனுல் ஏன் இந்த வயதிலேயே இந்தப் பாழும் நோய் வந்தது இவளுக்கு?

பிட்சு: ஆ! இந்தப் பெண்ணை எங்கோ எப்போதோ பார்த்த நினைவாக இருக்கிறதே...? எங்கே, எப்போது பார்த்தேன்?

(சில விளுடிகள் யோசனை-நினைவைப் பின் நோக்கிச் செலுத்துகிருர் பிட்சு)

பிட்சு: ஓ! நினைவு வருகிறது. நீண்ட நாட்களுக்கு முன் இந்தத் தெருவிற்கு அடுத்த கணிகையர் வீதி வழியாக நான் போய்க் கொண்டிருந்தபோது என்னை வழி மறித்து மயக்க முயன்ற பெண் அல்லவா இவள்? (வாரீர்-என் அழகைப் பாரீர்-வடிவழகைப் பாரீர்-- என்ற அவளது பழைய இசை பிட்சுவின் காதில் ஒலித்துப் பழைய நினைவை உண்டாக்குகிறது)

(அருகில் நெருங்குகிருர்)

(கணிகையின் குரல் தளர்ந்து கிணற்றிலிருந்து ஒலிப்பது போல் ஒலிக்கிறது.)

**கணிகை:** (திகைப்புற்ற குரலில்) சுவாமி! என்னைத் தங்களுக்கு நினைவிருக்கிறதா? இந்த நகரத்துக் கணிகையர் வீதி மருங்கில் நீண்ட காலத்திற்கு முன்பு என் நடனத்தைப் பார்க்க வருமாறு உங்களை நான் வழிமறித்தேனே, நினைவிருக்கிறதா?

**பிட்சு:** நன்றாக நினைவிருக்கிறது. ஆனால் நீதான் இப்போது அடையாளம் தெரியாதபடி உருச்சிதைந்து இப்படி இந்தப் பயங்கர நோய்க்கு ஆளாகிவிட்டாய்! அன்று நீ பெருமைப்பட்டுச் செருக்கிய அந்த உடலின் கவர்ச்சி இன்று எங்கே போயிற்று? அன்று பாடிய குயிலினுமினிய குரலை இன்று எங்கே பறிகொடுத்தாய்? அன்று வேல் போல் கயல்மீன் போல் மாவடுப் போல் மின்னிய உன் கருவிழிகள் ஏன் இன்றுஇப்படி இரத்தப்புண்களாகி விட்டன? எதற்காக இங்கே கூடியிருக்கும் ஒவ்வொருவரும் உன்னைத்தொட அஞ்சி அருவருப்பு அடைகிறார்கள்? பொன்னையும் பொருளையும் அளித்துக் கண்ணே! மணியே! என்று அன்று உன்னைத் தேடிவந்து கொஞ்சியவர்கள் இன்று ஏன் தொடவும் அஞ்சுகிறார்கள்? உலகை இப்போதாவது புரிந்து கொண்டாயா...?

(பதில் கூறாமல் அவள் விம்மி விம்மி அழும் ஒலி)

**கணிகை:** (அழுகைக்கிடையே) இந்தப் பாவியை மன்னிப்பீர்களா சுவாமீ...? அன்று ஆணவத்தால் உங்களிடம் ஏதேதோ பேசிவிட்டேன். ஒரு காலத்தில் என்னிடம் இருந்த அழகும், குரலினிமையும் எனக்கே உரியனவைகளாக என்றும் என்னிடமே இருக்கும் என்றுஇறுமாந்து செம்மாந்திருந்தேன். "சொந்தம் கொண்டாடுவதற்குக் காரணமான ஆணவம்தான் உன்னுடையது, மற்றவை எல்லாம் இறைவனுடையவை" என்பதை அன்றே நீங்கள் எனக்கு விளக்கமாக எடுத்துக் கூறினீர்கள்.

பிட்சு : ஆனால் அன்று நான் கூறியதை உணர உன் மனம் மறுத்தது. ஆணவம் உன் கண்களை மறைத்தது. ஏதேதோ பேசினாய் நீ...

கணிகை : பேசிய பாவத்தைத் தான் இப்போது அநுபவிக்கிறேனே...? இது போதாதா?

பிட்சு : மனித சமூகம் எத்தனை நயவஞ்சகமானது என்று இப்போது புரிகிறதா? உன்னிடம் அழகு இருந்தவரை உன்னை-மணமுள்ள தேனுள்ள மலரை நாடும் வண்டுகளைப் போல்-சுற்றிப் பறந்தார்கள். இன்றோ நாடுவாரில்லை. 'உன்மேல் எப்போது கருணை செலுத்த வேண்டும் எப்போது கடைக்கண் பார்க்க வேண்டுமென்பது எனக்குத் தெரியும்' என்று அன்றே நான் கூறினேன். அதனால்தான் உரிய காலத்தில் இன்று இப்போது என் உதவியைச் செய்வதற்காகத் தேடி வந்திருக்கிறேன்.

கணிகை : நன்றி மறந்த எனக்கு உங்களைப் போன்ற மகான் ஒருவரின் உதவியை அடையும் தகுதி இருக்கிறதா? இனியும் அதற்கு நான் பாத்திரமாக முடியுமா?

பிட்சு : எப்போது உன்னைத் தேடி வரவேண்டுமோ அப்போது உன்னைத் தேடித் தானாகவே என் கால்கள் வரும் என்று அன்று நான் கூறியிருந்தது நினைவிருக்கிறதா பெண்ணே?

கணிகை : நினைவிருக்கிறது! (அழுகை கலந்த குரலில்) 'விரும்புகிற போது செய்யாத உதவியை-எப்போதாவது செய்வதில் என்ன பயன் இருக்க முடியும்'-என்று நான்தான் அன்று உங்களிடம் வீணாக வம்புபேசினேன். 'விரும்புகிறபோது உதவி செய்வதைவிடத் தேவைப்படுகிறபோது உதவி செய்வதுதான் நல்லதென்று நான் கருதுகிறேன்' என நீங்கள் சாந்தமாகப் புன்முறுவல் பூத்த முகத்தோடு அன்று எனக்கு மறுமொழி கூறினீர்கள். உங்களுடைய அந்தப் புன்முறுவலின் காந்திதான் என் உடம்பை இன்று இப்படி ஒரேயடியாய் எரித்துவிட்டது.

பிட்சு : அழாதே பெண்ணே! இதுதான் உலகம். அன்று எல்லாரும் என்னைத் தொட்டு உதவி புரிய ஆசைப்படும் படி நீ இருந்தாய். இன்றோ உன்னைத் தொடுவதற்கு நான் மட்டுமே தயாராக இருக்கிறேன். உலகை இனியாவது புரிந்துகொள். வா. உன்னைக் கைத்தாங்கலாக உன் வீட்டிற்கு அழைத்துச் செல்லுகிறேன். இந்திரவிழாக் கூட்டத்திலே இப்படித் தெருவில் விழுந்து கிடப்பது நல்லதில்லை. உன்னை யாராவது மிதித்து விட்டுப் போய்விடுவார்கள். தேர்கள், குதிரைகள், யானைகள், எல்லாம் அதிகமாகப் போகும் இந்த வீதியில் இப்படி நடுத்தெருவில் நீ அநாதையாய்க் கிடப்பது கூடாது!

கணிகை : அழிந்தொழியப் போகிற உடல் எங்கே கிடந்தால் என்ன? எப்படிக் கிடந்தால் என்ன? 'வீட்டிற்கு அழைத்துச் செல்கிறேன்' என்கிறீர்கள். எனக்கு இப்போது வீடும் இல்லை. வாசலுமில்லை. என்னை நீங்கள் எங்குமே அழைத்துச் செல்ல முடியாது.

பிட்சு : வீடு, வாசல், இல்லாவிட்டால் என்ன? எப்போதும், எல்லாருக்கும், உலக அறவியின் வாயில் திறந்தே கிடக்கிறது. உலக அறவியின் உள்ளே உன்னைப் பாதுகாப்பாகக் கொண்டு போய்ச் சேர்க்கிறேன், வா போகலாம்.

கணிகை : வேண்டாம்! இந்தப் பாவியை விட்டு விடுங்கள். நான் தெருவிலேயே கிடந்து சாகவேண்டும். அப்போதுதான் எனக்குப் புத்திவரும். என்னைத் தொட உங்கள் கைகள் அருவருக்கவில்லையா? என்னை ஏறிட்டு நோக்க உங்கள் கண்கள் கூசவில்லையா? என்னைத் தொடுவதின் மூலம் பயங்கரமான இந்த நோயை அணுகாதீர்கள்.

பிட்சு : நான் துறவி! எனக்கு விருப்பு வெறுப்பில்லை! உடம்பிலே சந்தனமும், பன்னீரும், மணக்க நீ

என்னெதிரே நின்ற காலத்திலும் சரி, இப்போதும் சரி எனக்கு நீ ஒரேமாதிரித்தான் தோன்றுகிறாய்! ஏனென்றால் நான் உன் உடலை மதிக்கவில்லை. ஆத்மாவையே பரிபூரணமாக மதிக்கிறேன். அன்று நீ இருந்த கோலத்தில் உனக்கு எல்லாருமே போட்டி போட்டுக் கொண்டு உதவ முன் வந்திருப்பார்கள். இன்றோ நான் மட்டுமே உனக்கு உதவமுடியும். உனக்கு உதவி செய்யத் தேவைப்படுகிற காலத்தில்தான் உதவி செய்ய வருவேன் என்று வாக்களித்திருந்தேன். எனது அந்த வாக்கைக் காப்பாற்ற வாய்ப்புக் கொடு. மறுக்காதே.

கணிகை : வாக்கைக் காப்பாற்றுவதற்காக இந்த அவல நிலையிலும் எனக்கு முன்னால் வந்து நிற்பது உங்களது பெருந்தன்மையைக் காண்பிக்கிறது. ஆனால் உங்களது பெருந்தன்மையை ஏற்கிற அளவு நான் தகுதி உடையவள் என்ற நினைவுதான் எனக்கில்லை.

பிட்சு : போதும்! உலக அறவியில் கொண்டுபோய் விடுகிறேன். வா.

(பிட்சு அவளைத் தொட்டுத் தூக்குதல்)

கூட்டத்தினர் : ஆகா! இவருக்குத்தான் எத்தனைக் கருணை? அழுகிக் கிடக்கும் நோயை அருவருப்பின்றித் தொட்டுத் தூக்குகிறாரே, என்ன பெருந்தன்மை? எத்தனை நல்ல உள்ளம்! எவ்வளவு பெரிய பண்பாடு.

கணிகை : ஐயோ வேண்டாம்! விட்டு விடுங்கள். சாகிறவளுக்கு வாழ்வு எதற்கு? அழுகிப் போனவளுக்கு ஆதரவு எதற்கு?

பிட்சு : வா...மெல்ல...மெல்ல...உன்னை...உலக அறவியில் பத்திரமான இடத்திலே உடனே கொண்டு போய்ச் சேர்க்கிறேன்.

(சோகமான பின்னணி ஒலி)

(திரை)

## காட்சி - 11

### இடம்:—உலக அறவி

(மூத்த பிட்சு நீண்ட நாட்களாக இளைய பிட்சுவைக் காண முடியாமல் உலக அறவிக்குத் தேடிவருகிறார். வைகாசி-விசாகத்திற்கு நாட்கள் நெருங்குவதால்-அவர் வராதது மூத்தவருக்கு வியப்பை அளிக்கிறது. எனவே அவர் தற்செயலாக இளையவரைத் தேடி உலக அறவிக்கு வருகிறார்)

மூத்தபிட்சு : (தனக்குத்தானே) வைகாசி விசாக யாத்திரையாக மணிபல்லவம் போகவேண்டும் போகவேண்டும் என்று அலைந்து கொண்டிருந்த இந்த பிட்சுவை எங்கு தேடியும் பலநாட்களாகக் காணவே இல்லையே-இந்த உலகஅறவியின்அம்பலத்திற்குள்ளாவது இருக்கிறாரா... பார்க்கலாம். ஆ! அதோ அந்தத் தொழுநோயாளிப் பெண்ணுக்கு அருகே அமர்ந்து பணிவிடை செய்து கொண்டிருப்பது... யார்...? ஆம்... அவரேதான்... அருகில்நெருங்கிப் போய் என்னவென்று விசாரிக்கலாம். (இதற்குள் இவரை அவரே பார்க்கிறார்)

பிட்சு : வாருங்கள்! வாருங்கள்! நான் பல நாட்களாக உங்களைக் காண இந்திரவிகாரத்துப் பக்கம் வரவே முடியாமல் போய்விட்டது. காரணம்...இங்கே இந்தத் தொழுநோயாளிக்குப் பணிவிடை செய்யும் வேலை புதிதாக எனக்கு வந்துவிட்டது. என்னை மன்னியுங்கள்.

முதிய : நாட்கள் நெருங்குகின்றனவே! இம்முறை நீர் மணிபல்லவ யாத்திரை போகப் போவதில்லையா? கோமுகி தரிசனம் செய்யப் போவதில்லையா? உம்மைப் போகவிடுவதென்று நான் முடிவு செய்துவிட்டேன். அதற்காகவே இப்போது இங்கே தேடியும் வந்தேன்.

பிட்சு : மன்னிக்க வேண்டும் அடிகளே! இவ்வளவு காலம் நான் யாத்திரை போகவும் எனக்குப் புண்ணியம்

தேடவுமே முயன்றேன். இந்த நோயாளிக்குப் பணி விடை செய்து காப்பாற்றுவதில் உள்ள இன்பம் யாத்திரையில் இருக்குமென்று இன்று எனக்குத் தோன்றவில்லை.

முதியவ : பாராட்டுகிறேன்! இந்த வாக்கியமும், உணர்வும் உங்களுக்கே உண்டாக வேண்டுமென்றுதான் இவ்வளவு காலம் உங்களைப் போகவிடாமல் நான் தடுத்தேன். நம்முடைய இதயமே மணிபல்லவம். அதில் சுரக்கும் கருணையே கோமுகி. உண்மையான புத்த ஞாயிறு எங்கே உதிக்கிறது தெரியுமா? ஒவ்வொரு பிட்சுவின் மனத்திலும் ஞானோதயம் உண்டாகிக் கருணை சுரக்கும்போதுதான் அங்கே புத்த ஞாயிறு உதிக்கிறது. இந்த உண்மை புரிந்து விட்டால் ஒரு கவலையுமில்லை. நீங்கள் இப்போது புரிந்து கொண்டுவிட்டீர்கள். உங்கள் மனத்தில் புத்த ஞாயிறு உதித்துவிட்டது. உங்களுக்கு என் வாழ்த்துக்கள். இனி நீங்கள் எந்த இடத்தையும் தேடி யாத்திரை போகவேண்டிய அவசியமே இல்லை. ஒரு நல்ல பிட்சுவின் மனத்தில் துக்க நிவாரண மார்க்கம் தென்படும்போதே புத்த ஞாயிறு உதித்து விடுகிறது. அந்த ஞாயிறு உதித்த பின் இருள் இல்லை. துன்பம் இல்லை. பிணி இல்லை. பசி இல்லை. மூப்பு இல்லை. எந்த வேதனையும் இல்லை.

பிட்சு : அடிகளே! என்னை இவ்வளவு காலம் சோதனை செய்த உங்களுக்குத்தான் நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். நீங்கள் சோதனை செய்ததனால்தான் இந்த ஞானம் எனக்குக் கிடைத்தது. நான் வேண்டிய உடனேயே மறுக்காமல் நீங்கள் என்னை மணிபல்லவத்திற்கு அனுப்பி வைத்திருப்பீர்களானால் எனக்கு இந்த அநுபவ ஞானோதயம் ஏற்பட்டிருக்காது. இத்தனை ஆண்டுகள் நீங்கள் என்னைச் சோதனை செய்தீர்கள். அதன் காரணமாகவே இந்த உணர்வை நான் அடைந்தேன். மனத்தில் பெருகும் கருணையே புத்த ஞாயிறு

என்பதை இப்போது அடியேன் நன்முகப் புரிந்து கொண்டேன்.

முதியவ : நல்லது! நான் விடை பெறுகிறேன். உங்கள் பணி தொடரட்டும். உலகின் பிணி இருளைப் போக்க உதவுங்கள். பசியும், நோயும், நீங்கி வசியும் வளமும் சுரக்கப் பாடுபடுங்கள். மறுபடியும் நினைவூட்டுகிறேன். இலட்சியவாதியான பிட்சு ஒருவனுக்கு அவனுடைய மனந்தான் கோமுகிப் பொய்கை. அங்கே சுரக்கும் கருணையே நீர்ப் பெருக்கு. மறந்துவிடாதீர்கள்.

[சிறிது பேச்சை நிறுத்தி]

புத்தம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி
தர்மம் சரணம் கச்சாமி

(பதிலுக்கு அவரும் அதையே கூறுகிறார்)

(உலக அறவியில் எல்லாரும் சேர்ந்து இந்த மூன்று வாக்கியங்களை - மந்திரம்போல் நிறுத்தி உச்சரித்துக் நிறுத்திக் கூறிவிட்டுக் கீழ்வரும் பாடலைச் சேர்ந்து பாடுகின்றனர்)

இசைப்பாடல் (5)

ஆதி அமலன்
போதி மாதவன்
புண்ணிய சீலன்
மாதவச் செல்வன்
மணிமுடி துறந்தேன்
நாதன் நல்லவன்
நலிவுகள் தீர்ப்பவன்
பாத பங்கயம்
பணியப் பணிய
வேதனை தீரும்
விந்தைகள் நிகழும் — உலகில்
விந்தைகள் நிகழும்

(திரை)

# புத்த ஞாயிறு

**காலம்:-** வரலாற்றுக்காலம்

**இடம்:-** பூம்புகார் நகரம்

**களங்கள்:-** இந்திரவிகாரம், உலக அறவி நாளங்காடி, சக்கரவாளக்கோட்டம், நகரச் சதுக்கம்.

**பாத்திரங்கள்:-** புத்த பிட்சுக்கள், கணிகை, களிமகன், எட்டிப்பட்டம் பெற்ற செல்வர் உலகியல் பேசும் இளைஞன், காபாலிகள்.

# கோதையின் காதல்

## காட்சி-1

இடம்:—நாச்சியார் புரத்தில் ஒரு சதுக்கம்

*நாச்சியார் புரத்தில் பன்னிரண்டு நாள் வேனில் விழா நடைபெறுகிறது. சித்திரை முழுநிலா அன்று, கழைக் கூத்து நடந்துகொண்டிருக்கிறது. காட்சி தொடங்குகிறது! அந்த இளம் பெண் கோதை கைகளில் கழியொன்றை ஏந்தியவளாய்க் கயிற்றில் நடந்து கொண்டிருக்கிறாள்.*

*அவளைக் கட்டளையிட்டு ஆட்டிக் கீழே அமர்ந்து பறை கொட்டிக்கொண்டிருக்கிறான் ஒரு முதுமகன். ஆட்டக் காரியின் தந்தை அவன்.)*

முதுமகன்: கோதை! கவனம்... கவனம்... பராக்குப் பார்க்காதே...கீழே விழுந்துவிடப் போகிறாய்!

*[நடுநடுவே அவள் சில இனிய பாடல்களைப் பாடிக் கொண்டே கழைக்கூத்து ஆடுகிறாள். நாச்சியார் புரத்து வீதிகளெல்லாம், அவள் குரல் பரப்பிய இனிமைகள்... எட்டுப்பாளையத்துச் சிற்றரசர்களும் இரத்தின கம்பளம் விரித்து அமர்ந்து அவளுடைய ஆட்டத்தைப்*

பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அந்தக் கழைக் கூத்திற்கே பெருமையைத் தந்த இரசிகன் ஒருவன் தரையில் அமர்ந்து சீவிய பனையோலைகளில் எழுத்தாணியால் எதையோ எழுதிக்கொண்டிருக்கிறான். பாட்டும் கூத்தும் முடிகின்றன. கயிற்றை விட்டு அவள் கீழிறங்கி விடுகிறாள். பாராட்டுகிற ஆரரவாரக் குரல்கள் அங்கே அலைமோதுகின்றன.

முதுமகன்: போ மகளே! போய்ப் பாளையத்துச் சிற்றரசர்களை வரிசையாக வணங்கிப் பரிசு கேள் மகளே! போ....
[அவள் அந்தச் சுந்தர இளைஞனை மட்டும் கடைக் கண்ணால் பார்த்தபடி தயங்கி நிற்கிறாள். எல்லோரும், அந்தக் கழைக்கூத்தி, பாளையத்து அரசர்களிடம் என்ன பரிசு பெறப்போகிறாள் என்பதை அறிய ஆவலுடன் காத்திருக்கிறார்கள். அந்த வாலிபன், சற்றும் எதிர்பாராமல் எழுந்து வந்து அவள் முன் நிற்கிறான்.]

வாலிபன்: இந்தா! உன்னுடைய ஆட்டத்துக்கு இதைவிட மெய்யான பரிசு வேறு ஒன்றும் இருக்க முடியாது.... பெற்றுக்கொள்.

[ஓர் ஓலை நறுக்கை அவள் பக்கம் வந்து கைகளில் விழுமாறு வீசிவிட்டு மின்னலைப்போல் கூட்டத்துக்குள் போய் அவன் மறைந்துவிடுகிறான்.]

கோதை: (நறுக்கைவாங்கி வாய்விட்டுப் படிக்கிறாள்)
**'சீத மதிமுகமும் சீர்முத்துப் புன்னகையும் காதுவரை
நீள் கயல்விழியும்–கோவை கழையாடக் கண்டாடும்
கற்பனைகள் எல்லாம் இழையோடி ஏங்கிடுமென்
நெஞ்சு'**

[தங்களை முந்திக்கொண்டு பரிசளித்த அந்தக்காளை யார் என்று மீசை துடிக்கக் கனல் கக்கும் விழிகளுடன் பார்க்கிறார்கள் எட்டுப்பாளையத்துச் சிற்றரசர்கள்]

கோதை: (மறுபடியும் ஓலைநறுக்கைப் படிக்கிறாள்...)
'சீத மதி முகமும்......நெஞ்சு'

முதுமகன்: (மெல்ல அவள் காதருகே வந்து) போ மகளே! போ, அப்படியே நிற்காதே... பாளையத்தார்களை வணங்கிப் பரிசுகேள். போ... யாரோ ஊர்பேர் தெரியாதவன் தந்த ஓலையில் நேரத்தை வீணடிக்காதே!

(இளைஞனின் கவிதைப் பரிசை விடவும் சிற்றரசர்கள் தரப்போகும் பரிசுகள் எப்படி மதிப்புள்ளவையாக இருக்க முடியும் என்கின்ற அலட்சியத்தோடு, முதியவர் சொன்னாரே என்பதற்காகவும் கூட்டத்தை மதிப்பதற்காகவும் போய்ச் சிற்றரசர்களை வணங்கி அவர்கள் அளிக்கும் சம்மானங்களைப் பெற்றுக்கொண்டு, அப்படியே தந்தையின் மேலாடையில் கொண்டுபோய்க் கொட்டுகிறாள். ஓலை நறுக்கை மட்டும் தனியே எடுத்துத் தன் மின்னிடையில் பயபக்தியோடு சொருகிக்கொள்கிறாள்)

முதுமகன்: கோதை! யாரம்மா அந்தக் கிறுக்கன்? உன்னுடைய கழைக்கூத்தின் அற்புதங்களைக் கண்டு எட்டுப் பாளையத்துத் தலைக்கட்டுக்களும் மெய்ம்மறந்து கிறங்கிப்போய் வீற்றிருக்கும்போது, பித்தனைப்போல் எழுந்து ஓடிவந்து ஓலை நறுக்கை வீசி எறிந்துவிட்டு ஓடுகிறானே? ஆள் உன்னிடம் ஓலையைக் கொடுத்துவிட்டுப் பறந்துபோய்விட்டான். என் கையில் அகப்பட்டிருந்தால் நாலு பூசைக்காப்புச் சாத்தியிருப்பேன்...

கோதை: (விழிகளில் சீற்றம் சுழல) அப்பா! உங்கள் வார்த்தைகளை நான் அப்படியே ஏற்றுக்கொள்வதற்கில்லை! இரசித்த பின் பதிலுக்கு என்ன கொடுக்கப் போகிறார்கள் என்பதை வைத்து இரசிகத்தன்மையை மதிப்பிடப் பழகிக்கொள்ளக் கூடாது. ஒன்றும் பதிலுக்குக் கொடுக்கமுடியாமல் மனப்பூர்வமாக இரசிப்பவர்கள் ஆயிரம்பேர் இருக்கலாம். மனப்பூர்வமான அனுபவமே பெரிய கொடைதான். இலட்சம் பொற்காசுகளை விட ஒரு கவியின் இதயபூர்வமான வாக்கினால் புகழப்படுவது மிகப்பெரும் பாக்கியம் அல்லவா?

முதுமகன்: நீ என்ன சொல்கிருய் என்றே எனக்குப் புரிய வில்லை பெண்ணே! கூட்டம் எல்லாம் கலைந்து போயா யிற்று... சாப்பிடப்போகலாம்... வா.

[உணவு உட்கொண்டு பெரியவர் களைப்பால் உறங்கி விடுகிருர். நிலா இரவில், மறுபடியும் அந்த ஓலை நறுக்கை இடுப்பிலிருந்து எடுக்கிருள் கோதை... இதழ் களில் ஒற்றிக் கொள்கிருள். அப்போது......]

இருளிலிருந்து குரல் : 'சீத மதிமுகமும் சீர்முத்துப் புன்ன கையும்...'

கோதை: யார் அது? இந்த இருட்டு நேரத்தில்...ஆம்! அதே சொற்கள்...அதே பாடல்...

(மண்டபத் தோட்டத்து மகிழ மரத்தடியில் அமர்ந்து அந்த இளைஞன்தான் பாடிக் கொண்டிருக்கிருன் மறுபடியும் அவன் பாடத் தொடங்கும்போது கோதை யைப் பார்த்துவிடுகிருன்)

இளைஞன் : ஆகா! எவ்வளவு வியப்பு? நீ வருவாய் என நான் கனவுகூடக் காணவில்லையே?

கோதை : கனவு காண்பது ஒருவேளை உங்களைப் போன்ற கவிகளுக்கு வழக்கமாயிருக்கலாம்.

இளைஞன் : கனவிலும் கற்பனையிலும் இடைவிடாமல் தோன்றிக்கொண்டிருக்கிற உருவம் எதுவோ, அதுவே நேரில் வந்து நின்று விட்டால் அப்பால் கனவு காண் பதற்கு என்ன இருக்கிறது?

[கோதை நாணித் தலைகுனிகிருள். கோமளமானதொரு மெல்லிய குரலில் பேசுகிருள்]

கோதை : என் பெயர் கோதை என்று உங்களுக்கு எப்படித் தெரிந்தது? பெயர்கூடப் பொருந்தி வருகிற விதத்தில், நான் ஆடிக்கொண்டிருக்கும்போதே அவ் வளவு விரைவில் நீங்கள் அதை எப்படிப் பாடினீர்கள்?

இளைஞன் : உன் தந்தை உன்னை அழைத்ததிலிருந்து அந்தப் பெயரைத் தெரிந்துகொண்டேன். உன்னுடைய பெயரின் அர்த்தத்தில் இரண்டு அழகுகள் அடங்கி இருக்கின்றன. உன்னுடைய அழகு ஓர் அர்த்தம். அந்தப் பதத்தின் பொருளுக்கே இயல்பாக உள்ள அழகு இன்னும் ஓர் அர்த்தம். நீயோ, பூமாலையைக் காட்டிலும் அழகாயிருக்கிறாய்

கோதை : உங்கள் பெயர்?

இளைஞன் : மணவாளன், உன்னைப் போலவே இந்த விழாவுக்காக வந்தவன், நானும் இதே சத்திரத்தில்தான் தங்கியிருக்கிறேன்.

கோதை : எத்தனை அபூர்வமான பொருத்தம்...பார்த்தீர்களா? என்னுடைய பெயராய் வாய்த்திருக்கும் பதத்துக்குப் பூமாலை என்று பொருள் கூறினீர்கள். உங்களுடைய பெயருக்கு மணத்தை ஆள்பவன் என்று பொருள். மணத்தை ஆள்கிறவர் பெயர்தானே மணவாளர்? பூமாலையின் மணத்தை...?
[மேலே பேச நாணமுற்றுக் கண்களால் குறிப்பிற பேச முயல்கிறாள்]

இளைஞன் : நீ வெறும் கழைக் கூத்திதானே என்று நினைத்தேன். உனக்குப் பாட்டும் நன்றாக வருகிறது. நல்ல குரல். பழக்கப்படுத்திக் கொண்டால் இசையிலும் நீ வித்தகம் பெறுவாய்.

கோதை : சற்றுமுன் நீங்கள் பாடிக் கொண்டிருந்தீர்களே! அதைக் காட்டிலும் சிறந்த இசை ஒன்று உலகில் இருக்க முடியுமா?

இளைஞன் : நான் பாடுவதில் ஆச்சரியமென்ன? இசைக் கலை எங்கள் குலதனம். அதோடு சொந்தமாகக் கவியும் இயற்றிப் பாடுவேன் நான்.

கோதை : இன்று என்னுடைய கழைக்கூத்து அற்புதமாயிருந்ததாகப் பாளையத்துச் சிற்றரசர்கள் பவழமாலை

யும் முத்துமாலையும் பரிசளித்தார்கள். ஆனால் என்னுடைய மனம் ஒப்பி நான் அங்கீகரித்துக் கொண்ட ஒரே பரிசு உங்கள் கவிதை மட்டும்தான்.

இளைஞன் : இதைப் பாடு என்று இதயமே தானாகப் பொங்கி மேலெழுந்தால் ஒழிய நான் எதைப் பற்றியும் எந்தப் பயனை எதிர் பார்த்தும் புகழ்ந்து பாடுவதில்லை. ஆமாம்...இந்த விழா முடிகிறவரை நீ நாச்சியார் புரத்தில் தானே இருப்பாய்?

கோதை : ஏன்? எதற்குக் கேட்கிறீர்கள்?

இளைஞன் : ஒன்றுமில்லை! நாளைக்கு இசைத் திருவிழா. இந்த எட்டுப் பாளையத்துக்கு இசை ஞானம் உண்டோ இல்லையோ, தேச தேசாந்திரங்களிலிருந்து வந்திருக்கிற இசைக் கலைஞர்களெல்லாம் இவர்களிடம் தங்கள் சாமர்த்தியத்தைக் காண்பிக்கப் போகிறார்கள்.

கோதை : நீங்களும் தானே?

இளைஞன் : நாளைக்குத்தான் நீயே நேரில் பார்க்கப் போகிறாயே...வருகிறேன்...

[அவன் விடைபெற்றுச் செல்கிறான். சத்திரத்தின் மறு பக்கம் அவனுடைய உருவம் மறைகிறவரை அவனையே பார்த்துக்கொண்டு நின்றுவிட்டுத் திரும்புகிறாள் கோதை.)

(திரை)

## காட்சி-2

### இடம்:—வேனில்விழா நடைபெறுமிடம்

வேனில் விழாவில் இரண்டாம் நாள்...இசைத் திருவிழா, வசந்த மாலை அம்மன் கோவில் பொது வெளியில் அமைந்திருந்த அரங்கில் கலைஞர்கள் ஆடம்பரமாக அமர்ந்து பாடிக்கொண்டிருக்கிறார்கள். சரிகைத் தலைப்பு மேலாடை, வெள்ளிப் பூண் பிடித்த

பிரம்பு, காதுகளில் வைரக் கடுக்கன், கைகளில் மோதிரம் என்று கலைஞர்கள் விதம் விதமாக இருக்கிறார்கள். இந்தவிதமான ஆடம்பரங்கள் எதுவும் இல்லாமல், வலது கையில் சின்னஞ்சிறு அகல் விளக்கொன்றை மட்டும் ஏற்றி எடுத்துக் கொண்டு கவனத்தோடு நடந்து அரங்குக்கு வருகிறான் கோதைக்குப் பழக்கமான அந்த இளம் கவி மணவாளன்]

ஒரு சிற்றரசர் : வா அப்பா! வா, உன் சங்கீதத்தை விளக்கேற்றி வைத்துக் கொண்டுதான் கேட்கவேண்டுமென்று நீயே முன்னேற்பாடாகத் தீபம் கொண்டு வந்து விட்டாயோ?

மணவாளன் இதையெல்லாம் அலட்சியப்படுத்துகிறவனாய் அரங்கேறுகிறான். கோதை கண்ணிமையாமல் பெருமை பொங்க அவனையே பார்த்துக் கொண்டிருக்கிறாள். அதுவரை பாதுகாப்பாக அணையாமல் தீபத்தைக் கொண்டுவந்தவன், இடதுகை அணைப்பை விலககிக் கொண்டு தீபத்தை வலதுகையால் மேலே உயர்த்திப் பிடித்தான். நாற்புறக் காற்றும் பாய்ந்துவர தீபம் படபடக்கிறது. தீபம் அணைந்துவிடப்போகிற நேரத்தில் மணவாளனின் நாவிலிருந்து ஓர் இராகம் ஒலிக்கத் தொடங்குகிறது. அத்தனை காற்றுக்கும் நடுவே தீபம் மறுபடியும் குதித்துக் கொழுந்து விட்டுப் பொங்கி எரிகிறது. அரைநாழிகைக்கும் மேல் இந்த அற்புத சாகசம் தொடர்கிறது. அவையின் முன்புறமாக அமர்ந்திருந்த வயதுமுதிர்ந்த ஓர் இசைக் கலைஞர் கோபத்தோடு உடம்பே ஆடும்படிஎழுந்து நின்று கொள்கிறார்.

அவர் : தம்பி! இதை நாங்கள் ஒப்புக் கொள்ளவே முடியாது. இது சங்கீதமில்லை. மாந்திரீகத்தையும், வசியத்தையும் கலந்து சங்கீதம்போல் வித்தை காட்டிப் பாமரர்களை ஏமாற்றக் கூடாது...

மணவாளன் : ஐயா இது தீபவர்த்தினி என்று ஓர் இராகம் என் பாட்டனார் இந்த அபூர்வ ராகத்தை எனக்குச்

சொல்லிக் கொடுத்தார். இதற்குக் குரல் மட்டும் போதாது. குருமுகமான அருள், குடும்பத்துப் பரம்பரையாய் வரும் தவம், சித்தி எல்லாமே வேண்டும். சங்கீதம் எங்கள் குடும்பத்தின் தவம். தலைமுறை தலைமுறையாய் அக்கினியை அணையாமல் காத்து வரும் முனிவர்களின் வேள்விமுறையைப்போல் இப்படிச் சில அபூர்வ ராகங்களை எங்கள் குடும்பத்தில் ஒடுங்கி விடாமல் வளர்த்து வருகிறோம். மாந்திரீகம், வசியம் என்று ஏதேதோ சொல்கிறீர்களே, பெரியவரே! சங்கீதமே ஒரு மந்திரம் என்றுதான் என் பாட்டனார் சொல்லுவார். இசை தெய்வத்தையே வசியம் செய்ய முடிந்த மந்திரமானால் அதே இசையைக் கொண்டு மனிதர்களை வசியம் செய்வது என்ன பிரமாதம்? சிலரால் அப்படி முடிவதில்லை. அது அவர்களுடைய சொந்தக்குறையே தவிரச் சங்கீதத்தின் குறையில்லை.

[பெரியவர் வாய் அடங்குகிறது. அவன் செய்து காட்டிய இன்னும் சில அற்புதங்களால் கூட்டம் பிரமிப்படைகிறது. கோதையும், அவளுடைய தந்தையும் சத்திரத்துக்குத் திரும்புகிறார்கள்]

முதுமகன் : ஏன் அம்மா? என்னவோ போல் ஏங்கிப் போயிருக்கிறாய்? உன்னுடைய கழைக் கூத்துக்கு ஈடாக எதுவுமே இல்லை கோதை! இன்றைக்கு இந்த இசையில் கூட்டம் ஏதோ பொம்மைகளைப்போல் பிரமித்துப் போயிருந்ததே தவிர, நேற்று உன் கூத்தின் போது இருந்த ஆரவாரமும் ஆர்வமும் இன்று இல்லையே அம்மா?

கோதை : ஆரவாரமும் ஆர்வமும் இருந்தால் போதுமா அப்பா? அவையை அப்படியே அடக்கியாள்கிற கலையல்லவா உயர்ந்த கலை? இந்த மணவாளன் இருக்கிறாரே: இவர் தெய்வீக அம்சம் பொருந்தியவர்.

முதுமகன்: (சினம் கொண்டு அவளை உறுத்துப் பார்க்கிறார்) உன்னுடையகழைக் கூத்துக்கு மூலமான முதல் வனப்பே

உடல்தான் பெண்ணே! எந்த நினைப்பிலும் நீ உருகி இளைக்கக் கூடாது. உடம்பை அப்படியே பூச்சரமாய் வளைத்த வளைவுக்கு வருகிறாற்போல மின்ன மின்ன வைத்துக் கொள்ள வேண்டும். புரிந்து கொள்!

## காட்சி-3

[கோதை எதிர்பார்த்தவாறு மணவாளன் அன்று இரவு இன்னிசை திருவிழா முடிந்து சத்திரத்துக்குத் திரும்பி வரவில்லை. பெரியவர் உறங்கிய பின்பு பூனைபோல மெல்ல எழுந்து அந்த மகிழ மரத்தடியில் போய்க் கோதை அவனுக்காகக் காத்திருக்கிறாள்]

கோதை: (தனக்குள்) எந்த ஆண்பிள்ளையின் மேலும் என் மனம் ஈடுபடுவது அப்பாவுக்கு நிச்சயமாகப் பிடிக்காதுதான். அப்படிப்பட்டதொரு நோக்கத்தோடு கலைக்கூத்துக்காக மட்டும் தானே என்னை வளர்த்திருக்கிறார்? ஆனால்... நேற்று இவரைப் பார்த்தது முதல் நானும், என் உடலும், அதன் அழகுகளும் இவருக்காகவே வளர்க்கப்பட்டோம் என்றல்லவா ஏங்குவதாகத் தோன்றுகிறது...

[முன்தினம் அவனிடமிருந்து பரிசாகத் தனக்குக் கிடைத்த அந்தப் பாடலை எடுத்துப் படித்து மறுபடியும் அந்தப் பெருமிதத்தில் சிறிது நேரம் திளைக்கிறாள்... இன்னும் மணவாளன் வருவதாகக் காணோம். பொறுமையிழந்தவளாய்ச் சத்திரத்து மணியக்காரரிடம் போய் விசாரிக்கிறாள்]

கோதை: ஐயா...! உங்களுக்கு ஏதாவது தகவல் தெரியுமா? அந்தப் பாட்டுக்கார இளைஞர் இங்கே தங்கியிருப்பதாய்ச் சொன்னாரே... அவர் வந்துவிட்டாரா?

மணியக்காரர்: யாரு? மணவாளத் தம்பியா? நாச்சியார் புரத்து அரண்மனையிலிருந்து அலங்காரப் பல்லக்குக் கொணர்ந்து அரசமரியாதையோடு அவரை அழைத்

துப்போனார்களே?... இளையராணி முத்து நாச்சியார் மீது அரசருக்கு அளவு கடந்த பிரேமை. அந்த முத்து நாச்சியாரின் மகளான பாளையத்து இளவரசி மோகன வல்லிக்கு இவரைக் கொண்டு சங்கீதம் கற்றுத்தர ஏற்பாடு நடக்கும் போலிருக்கிறது...

கோதை: (திகைப்படைந்தவளாய்)... அதற்காக...?

மணியக்காரர்: இளையராணி பிடிவாதம் பிடித்தாளாம்... 'இப்போதே அந்த மணவாளனை அழைத்துக்கொண்டு வந்து ஏற்பாடு செய்தால்தான் ஆயிற்று' என்று... அரசர் என்ன செய்வார்? உடனே அழைத்துவரச் சொல்லிப் பல்லக்குடன் இவரைத்தேடி ஆட்களை அனுப்பிவிட்டார். இளையராணிகள் ஆசைப்பட்டு, அதற்குச் செவிசாய்க்காத பாளையத்து அரசர்கள் எந்தக்காலத்திலாவது எந்தக் கதையிலாவது உண்டா அம்மா?

[முகம் தெரியாத அந்த மோகன வல்லியின்மீது கோதைக்குத் தாங்கமுடியாத பெருஞ்சினம் எதற்காகவோ மூள்கிறது. வெளிக்காட்டாமல் திரும்பி நடக்கிறாள். கோபத்தோடு அந்தப்பாடலின் பின் மூன்று வரிகளையும் மெல்லத் தனக்குள் சொல்லிப் பார்க்கிறாள்.]

கோதை: "காது வரை நீள் விழியும்-கோதை
கழையாடக் கண்டாடும் கற்பனைகள் எல்லாம்
இழையோடி ஏங்கிடும் என் நெஞ்...சு"

இப்படிப் பாட்டில் எனக்காக ஏங்கும் நெஞ்சு மெய்யாகவே எனக்காக ஏங்குமானால் நான் ஒருத்தி இந்த மகிழ மரத்தடியில் இப்படி வந்து காத்திருப்பேன் என்பதை மறந்து எப்படி அவர் அரண்மனைப் பல்லக்கில் ஏறிக்கொண்டு போனார்? (நெட்டுயிர்க்கிறாள்)

[எதிரே கோதையைத் தேடிக்கொண்டு வந்த அவளுடைய தந்தை வழிமறிப்பதுபோல் திடுமென அவளெதிரே வந்து நிற்கிறார்.]

பெரியவர்: (கண்களிலும் முகத்திலும் குரலிலும் கடும் சீற்றம் தெரிய) உன் போக்குச் சிறிதும் நன்றாயில்லை மகளே! நான் உறங்கிவிட்டதாக நினைத்துக்கொண்டு தானே நீ இங்கு இப்படித் தனியே எழுந்திருந்து வந்தாய்?

கோதை: (மௌனமாகித் தலைகுனிந்தவாறு) அதெல்லாம் இல்லையப்பா... வந்து...வந்து...?

பெரியவர்: வந்தாவது? போயாவது? போதும் அம்மா! நாலு வயதுக் குழந்தையாக உன் தாய் உன்னை விட்டுப் போனநாளிலிருந்து ஓர் அபூர்வமான மூலிகைச் செடியை மிகவும் பாதுகாப்பாய்ப் போற்றிப் பேணி வளர்ப்பதைப்போல் உன்னையும் உன் உடம்பையும் வளர்த்தது இந்தக் கழைக் கூத்துக் கலைக்காகவே என்பதை நீ மறந்துவிடக் கூடாது பெண்ணே! ஏனைய பெண்களைப்போல் உலகரீதியான நினைவுகளை உன் மனம் ஒருகாலும் தழுவக் கூடாது கோதை!

[கோதை மறுமொழி ஏதும் பேசமுடியாமல் நடக்கிறாள். அவள் சத்திரத்தை அடைந்து தனிமையில் உறங்காமல் தவிக்கிறாள்... அதே நேரத்தில் அரண்மனைத் தனியறை ஒன்றில் தனியனாக உறக்கமின்றித் தவிக்கிறான் மணவாளன்]

காட்சி மாற்றம்

மணவாளன்: (தனக்குள்) யாருக்கு வேண்டும் இந்த அரண்மனைச் சுகபோகங்களெல்லாம்? நிறைந்த அசௌகரியங்களோடு இருந்தாலும் மேலே ஆகாயம் கீழே பூமி என்று திரிகிறபோதுதான் மனம் எவ்வளவு சுதந்திரமாகவும் உல்லாசமாகவும் இருக்கிறது! சௌகரியமான சூழ்நிலைகளில் தேவைக்கு அதிகமான உபசாரங்களுக்கு இடையே அகப்பட்டுக் கொள்ளும்போது அவற்றிலிருந்து உடனே விடுபட்டுப் பறக்கத்தானே நம் மனம் துடிக்கிறது?

## காட்சி-4

*(நாச்சியார் புரம் அரண்மனையில் மறுநாள் பொழுது விடிகிறது. மனத்திற்குச் சிறிதும் விருப்பமில்லாத புதுப்புது அநுபவங்கள் மணவாளனை வெறுப்படைய வைக்கின்றன. அரச கம்பீரமான ஆடம்பர அலங்காரங்களோடு, தோழி ஒருத்தி வீணையைக் கைகளால் ஏந்திவர அங்கு அவன்முன் வருகிறாள் பாளையத்து இளவரசி)*

மணவாளன்: *(தனக்குள்)* இவளுக்கு மோகனவல்லி என்பதற்கு பதில் அலங்காரவல்லி என்றே பெயரிட்டிருக்கலாம்! இவள் என்னிடம் சங்கீதம் கற்றுக்கொள்ள வருகிறாளா, இல்லை தன் அலங்காரங்களால் என்னை மருட்டவருகிறாளா?

*['நான் அழகாக இருக்கிறேன்' என்பதை ஒவ்வோர் கணமும் நிரூபிக்க விரும்புகிறவளாக நடந்து வருகிறாள் இளவரசி. குரு வணக்கம் கூடச் செய்யாமல் மணவாளனுக்கு முன்னால் வந்து மிடுக்காக அமர்ந்துகொள் கிறாள். பணிவோ, விநயமோ சிறிதளவும் இல்லாத இவளிடம் இசை அறிவாவது இருக்கிறதா என்பதைச் சோதிக்க விரும்பிக் கேள்விகள் சிலவற்றைக் கேட் கிறான் மணவாளன்]*

மணவாளன் : இளவரசி! சில கேள்விகள்...காந்தருவம், கீதம், பாணி, காமரம்...இந்தப் பெயர் வகைகள் எதையெதைக் குறிக்கும் என்று தெரியுமா?

மோகனவல்லி : ......தெரியாது.........

மணவாளன் : குறிஞ்சியில் தோன்றிய செம்பாலைப் பண்ணைப் பாடினால் அது எந்த இராகத்துக்குச் சமமாக இருக்கும்?

மோகனவல்லி : ......தெரியாது.........

மணவாளன் : நைவளம், காந்தாரம், படுமலை, மருள் அயிர்ப்பு, பஞ்சுரம், மெய் ஆற்றுச் செந்திறம் இவை எந்த யாழ்த்திறத்தின் பெயர்கள்?

மோகனவல்லி : ......தெரியாது.........

மணவாளன் : பின்பு உங்களுக்கு என்னதான் தெரியும்?

மோகனவல்லி : இப்போது உங்களிடம் கற்றுக்கொள்ள வந்திருக்கிறேன் என்பதுமட்டும் தெரியும்...

மணவாளன் : அது எனக்கும் தெரியும். ஆனால் அடிப்படை இசை அறிவுகூட இல்லாதவர்களுக்கு நான் எதைக் கற்பிக்க முடியும்? மலையுச்சியில் நின்று கொண்டிருக் கிறவனிடமிருந்து அகல பாதாளப் பள்ளத்தில் கீழே நிற்கிறவர்கள் எதையாவது கைநீட்டிப் பெற முடியுமா? பெறுவதற்குத்தான் ஏதாவது எட்டுமா?

[இதைக் கேட்டுப் பாளையத்து இளவரசி மோகனவல்லி கோபத்தோடு உதடுகளை மடக்கிக் கடித்துக் கொள் வது போல் வெறுப்புக்காட்டி முகம் சுளித்தாள். அவளது சிவந்த முகமே சினத்தினால் மேலும் சிவந்தது]

மோகனவல்லி : ஊர் பேர் தெரியாமல் முன்பின் பார்த் திராத நாடோடிக் கழைக்கூத்தியைப் புகழ்ந்து கவி பாடுவீர்கள் நீங்கள்! அப்படிப் பாடுவதற்குப் பாத்திர மாகிற ஞானசூன்யங்களெல்லாம் உங்களைக் கவர முடியும். நாங்கள் கவர முடியாது. அப்படித்தானே?

மணவாளன் : அது என் விருப்பம்! இதைப்பாடு என்று மனம் தானாகவே பொங்கி மேலெழுந்தாலொழிய நான் எதையும் யாரையும் எதற்காகவும் மதித்துப் பாடுவ தில்லை. நீங்களும் ஊர் பேர் தெரியாத கழைக்கூத்தி யாய்ப் பிறந்து அதேவிதமான அழகுடன் தோன்றினால் உங்களையும் பாடியிருப்பேனோ என்னவோ?

மோகனவல்லி : உங்கள் பதிலின் இகழ்ச்சியும் அலட்சிய மும் எனக்குப் புரிகிறது...போகட்டும்...என்றால் முடிந்

தனதைப் பார்க்கிறேன்... (சினத்தோடு புறப்படுகிறுள் இளவரசி)

[மணவாளன் திரும்பி நடக்கிறுன். பத்துப் பதினைந்து நாட்கள் சென்று அந்த அரண்மனையாகிய சுகபோகச் சிறையைவிட்டு வெளியேற முடிவு செய்கிறுன். ஒரு நாள் சாயங்காலம், மலையடிவாரத்தில் உலாவப் போவதாய்ச் சொல்லிவிட்டுப் புறப்பட்டு அரண்மனையி லிருந்து வெளியேறி வந்த மணவாளன் மீண்டும் அந்த அரண்மனைக்குத் திரும்பவே இல்லை.]

## காட்சி-5

[மலையடிவாரத்துச் சாலையில் உலாவிக் கொண் டிருக்கிறுன் மணவாளன்]

மணவாளன் : (தனக்குள்) இந்தப் பதினைந்து இருபது நாட்களாய் எப்படிக் கோதையைப் பார்க்காமல் இருந்தோம்? நாச்சியார் புரத்து வேனில் விழாக்கூட முடிந்து விட்டதே! கோதையும் அவள் தந்தையும் ஊருக்குத் திரும்பியிருக்கலாமோ என்னவோ? எதற்கும் சத்திரத்தில் போய்க் கேட்டுப் பார்க்கலாம்...

(விரைவாகச் சத்திரத்தை நோக்கி நடக்கிறுன். கோதையைப் பற்றிய நினைவுகள் அவனுள் பாடலாய் எழுகின்றன. நீலாம்பரி ராகமும் சுகமான அனுபவமு மாய் அவன் நடக்கும்போது மலையடிவாரத்து மூங்கில் காட்டிலிருந்து ஓர் இனிய அழுகுரல் கேட்கிறது... நீலாம்பரி நின்றுபோகிறது.)

மணவாளன் : யார் அது? யாருடைய குரல்?

(ஓடிப் போய்ப் பார்க்கும்போது கோதை தலைவிரி கோலமாக அங்கே நின்று கொண்டு புலம்பிக் கொண் டிருக்கிறுள். சில பச்சை மூங்கில்கள் வெட்டிக் குவிக்கப் பட்டிருக்கின்றன. மூங்கில் புதர் அருகே கோதையின் தந்தையான அந்தப் பெரியவர் நிலைகுலைந்து கீழே

விழுந்து கிடக்கிறார். அவருடைய கையிலிருந்து நழுவிய வெட்டரிவாள் ஒருபுறம் கிடக்கிறது. மணவாளனைப் பார்த்ததுமே கோதை கதறி அழுகிறாள்)

கோதை : இந்த உலகத்தில் இனிமேல் நான் அநாதை. கழைக்கூத்துக்கு ஏற்றாற்போல் நல்ல மூங்கில்கள் இங்கே கிடைக்கும் என்றார்கள். காட்டுக்குள் நுழைந்து மூங்கில் வெட்டவந்து மூச்சையே விட்டு விட்டார் என் தந்தை. மூங்கில் புதரில் இருந்த பாம்புப் புற்றைக் கவனிக்காமல் புற்றின் மேலேயே காலை வைத்து ஏறி விட்டார். ஐயோ! இப்படி இங்கே உயிரைப் பறி கொடுக்கவா நாச்சியார் புரத்து வேனில் விழாவுக்கு என்னை ஆவலோடு அழைத்து வந்தார்? விழா முடிந்ததும் இங்கிருந்து புறப்பட்டிருந்தாலும் நல்லதாகி இருக்குமே! ஏன் தான் இங்கே சில நாட்கள் தொடர்ந்து தங்கி நல்ல மூங்கில்கள் வெட்டிக்கொண்டு போக வேண்டுமென்ற பேராசை அப்பாவுக்கு வந்ததோ? (மேலே பேச முடியாமல் குமுறிக் குமுறி அழுகிறாள். கோதையைத் தேற்ற முயல்கிறான் மணவாளன்)

மணவாளன் : அழாதே கோதை! நடுக்காட்டில் மூங்கில் வெட்டிக் கொண்டுபோக வந்த இடத்தில் உன் தந்தைக்கு எமன் காத்துக் கொண்டிருப்பான் என்று யார்தான் எதிர்பார்த்திருக்க முடியும். கவலைப்படாதே பெண்ணே! உலகத்தில் யாருமே அநாதை இல்லை... அரண்மனையில் அடைபட்டுக் கிடந்த நான் இன்றைக்கு இந்த மலையடிவாரத்துச் சாலையில் உலாவப் புறப் பட்டதே இப்படி ஓர் அநாதைக்கு உதவவேண்டு மென்ற தெய்வ சித்தத்தினால்தான் போலிருக்கிறது. உலாவிவிட்டுத் திரும்பும்போது சத்திரத்தில் உன்னை விசாரிக்கவேண்டுமென்று எண்ணித்தான் இந்தப்பக்கம் நடந்தேன்...சிரித்த முகமும் இனிய பேச்சுமாக உன்னைச் சந்திக்க விரும்பினேன். அந்தச் சந்திப்பு

இப்படித் துயரமாக நேரும் என்று நான் சிறிதும் எதிர் பார்க்கவில்லையே!

[கோதையின் அழுகையும் கதறலும் அந்த மூங்கில் காடெல்லாம் எதிரொலிக்கிறது.]

மணவாளன் : கோதை! இனிமேல் நீ அழுது என்ன பயன்? இதோ என்னைப்பார்! இந்த ஊருக்கு நீயும் புதியவள், நானும் புதியவன், இரவு ஆக ஆகக் காட்டில் விலங்குகளின் தொல்லை அதிகம். உன் தந்தையின் சடலத்தை இங்கிருந்து ஊர் மயானத்துக்குச் சுமந்து சென்று இறுதிக்கடன்களைச் செய்து விடலாம்! சந்தர்ப்பத்துக்கு மட்டும் உதவ வந்த சாதாரணத் துணையாக என்னை நினைத்துவிடாதே பெண்ணே! என்னுடைய சத்தியமான துணையும், ஆதரவும், உனக்கு என்றும் உண்டு. உன்னுடைய கழைக்கூத்தைப் பார்த்த முதல் விநாடியே கல்லாய் இறுகிப் போயிருந்த என் இதயத்தை நீவென்றிருக்கிறாய்! இந்த வெற்றி உன்னைக் காப்பாற்றும்...

கோதை : தவறு...என் இதயம்தான் உங்களுக்குத் தோற்றுப் போயிருக்கிறது, நீங்கள் ஒரு மகாகவி, இசை மேதை, நான் உங்கள் தோளில் மணப்பதற்காகவே மலர்ந்த பூமாலை, நீங்கள் மணவாளர், எனக்கு உற்றார் உறவு எல்லாம் நீங்கள்தான். என்னுடைய தந்தை இறந்ததற்காக நான் உங்களைத் தழுவிக்கொண்டுதான் அழவேண்டும். உங்களைச் சாதாரணத் துணையாக நான் ஒருபோதும் நினைத்ததில்லை. உங்களை என் வாழ்க்கைக்கே துணையாக அடையவேண்டுமென்று, பார்த்த கணத்திலிருந்து உருகித் தவிக்கிறேன் நான். என்னுடைய இந்தக் கைகள் உங்களுடைய பாதங்களைத் தொழுவதற்காகவே மலர்ந்த பூக்கள்!

மணவாளன் : அதிகம் உணர்ச்சி வசப்படாதே கோதை! இனி மேலே ஆக வேண்டியதைக் கவனிப்போம்...

[மூங்கிற் காட்டிலிருந்து நாச்சியார் புரத்து மயானம் வரை முதியவரின் உடலைச் சுமந்துகொண்டு வந்து இறுதிக்கடன்களை நிறைவேற்றுகிறான் மணவாளன். உடன் வந்த கோதை அழுது முகம் வீங்கி வாடித் துவண்டுபோய் விடுகிறாள். நள்ளிரவில் மயானத் தனிமையை விட்டு இருவரும் வெளியேறுகிறார்கள். நாச்சியார் புரத்து வீதிகளில் பாதி இரவின் அமைதியில் நடந்து போய்க்கொண்டிருக்கும்போது கோதை நடக்க முடியாமல் மிகவும் சோர்ந்து தடுமாறுகிறாள். அவளுடைய கையை ஆதரவாகப் பற்றித் தாங்கிக் கொண்டு சத்திரத்தைநோக்கி நடக்கிறான் மணவாளன்]

மணவாளன் : கோதை! இந்த உலகத்தில் நீயும் ஓர் அநாதை, நானும் ஓர் அநாதை. நீயும் ஒரு கலையில் தேர்ந்தவள், நானும் ஒரு கலையில் தேர்ந்தவன். இரண்டுபேரும் தனித்தனியாய்த் தவிப்புக்களை உணர்ந்தவரை அநாதைகள்தான். ஆனால் இனிமேல் அப்படியில்லையே! இரண்டுபேரும் ஒன்றாக நடக்கிறோம். ஒரே வழியில் நடக்கிறோம். ஒன்றாக உணர்கிறோம். ஒன்றாகத் தவிக்கிறோம்! ஆகவே இந்த விநாடியிலிருந்து இரண்டு பேருமே அநாதைகள் இல்லை கோதை! பாளையத்து இளவரசி மோகனவல்லிக்குச் சங்கீதம் கற்பிக்கச் சொல்லி என்னை அரண்மனைக்கு அழைத்துக்கொண்டு போனார்கள். அந்த அரண்மனையிலிருந்து விடுபட்டு ஓடி வரவும், உன்னைக் காணவும் நான் தவித்த தவிப்பைச் சொல்லி முடியாது. இன்று இதோ வந்துவிட்டேன். இனிமேல் மறுபடி அரண்மனை வாயிற்படிகளில் ஏறுகிற நோக்கமில்லை. பாளையத்து இளவரசிக்கு இசை கற்பிப்பதைவிட உனக்கு அதைக் கற்பித்து உன்னை அங்கீகரித்துக் கொள்ளவே நான் விரும்புகிறேன். நீ என்னுடையவள், என்னுடைய குடும்பச் சொத்துக்களாகிய அபூர்வ ராகங்களைக் கற்றுக்கொள்ள நீயே பாத்திரமானவள்...

கோதை : என்னுடைய தவம் வீண்போகவில்லை. இப்படி நீங்கள் சொல்வது என் பூர்வ புண்ணிய வசத்தால் நான் பெறும் பாக்கியம். (குனிந்து மணவாளனின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொள்கிறாள்) இருவரும் மெல்ல நடந்து, சத்திரத்தை அடைகிறார்கள். கதவைத்தட்ட, மணியக்காரர் அந்த அகாலத்தில் உறக்கம் சோர்ந்த விழிகளோடு வந்து கதவைத் திறக்கிறார். மணவாளனையும் கோதையையும் சேர்த்துப் பார்த்துத் திகைக்கிறார்.

மணியக்காரர்: என்ன ஐயா இது? அரண்மனை வித்துவானாக இருந்து பாளையத்து இளவரசிக்குச் சங்கீதம் கற்பிப்பதாக ஊரெல்லாம் உன்னைப் பற்றிப் பெருமையாகப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். நீ என்னடாவென்றால் கழைக் கூத்திப் பெண்ணோடு இரவில் ஊர் சுற்றிக் கொண்டிருக்கிறாய்?

[கண்களில் நீர் தளும்பச் சற்றே நிமிர்ந்து மணவாளனைப் பார்க்கிறாள் கோதை. அவனோ சுட்டுவிடுகிற மாதிரி மணியக்காரரைப் பார்க்கிறான்]

கோதை : (மெல்லிய குரலில்), நீங்கள் என்மேல் கொள்கிற அன்பையும் ஆதரவையும் உலகம் எப்படி வரவேற்கிறது பார்த்தீர்களா?

மணவாளன் : ஐயா! மணியக்காரரே! உங்கள் நாச்சியார்புரத்து அரண்மனையில் யானையையும் குதிரையையும் வளர்க்கிறமாதிரி சங்கீதத்தையும் வளர்த்துவிட முடியாது என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். சத்திரம் தருமசாலை என்று நினைப்பதால்தான் உங்களிடம் இப்போது வந்து தங்குவதற்கு இடம் கேட்கிறோம். பாளையத்து அதிகாரத்துக்குப் பணியாதவர்களைத் தங்கவிட மாட்டீர்களானால், தெருவில் எங்காவது மரத்தடியில் படுத்து உறங்கிக் கொள்கிறோம். நான் அரண்மனையிலிருந்து சொல்லாமல் கொள்ளாமல் வெளியேறி வந்து விட்டேன்...

மணியகாரர் : அப்படியென்றால்...?

மணவாளன் : ஆம்! மறுபடி அங்கே போய் இளவரசிக்குச் சங்கீதம் கற்பிக்கிற உத்தேசம் எனக்குச் சிறிதும் இல்லை. இந்தப் பெண் கோதை காட்டுக்கு மூங்கில் வெட்டி வரப் போன இடத்தில் தந்தையைச் சாவுக்குப் பறி கொடுத்து விட்டாள். அந்தப் பெரியவரை இப்போது தான் மயானத்தில் எரித்துவிட்டு வந்து இங்கே நிற்கிறோம். நீரோ வாயில் தோன்றுகிற சொற்களை வரம்பின்றிப் பேசுகிறீரே! உங்கள் பாளையத்து இளவரசியை விட இவளுக்கு இசை கற்பிப்பதை நான் அதிகமாக விரும்புவேன். என் விருப்பத்துக்கு எதிரே எனக்கு வேறெவரும் இலட்சியமே இல்லை. தெரிந்து கொள்ளும்.

கோதை : (மணவாளனின் காதருகே) என் பொருட்டு உங்களைக் குறைத்துக் கொள்கிறீர்களே, கண்ணா! நான் எந்த விதத்தில் உங்களுக்குச் சமமானவள்? உலகத்தார் சாதாரணமாக எடைபோடும் கழைக் கூத்தாடி இனத்தைச் சேர்ந்தவள்தானே நான்?

மணவாளன் : அப்படிச் சொல்லாதே கோதை! உன்னைப் படைத்த படைப்புக் கடவுளே என்னெதிரில் வந்து நின்று, நீ குறைவான குலத்தைச் சேர்ந்தவள் என்று இழிவு கூறினாலும் நான் அதை ஏற்றுக்கொள்ள மாட்டேன். என் மனத்தில் நான் முடிவு செய்வதுதான் என்னுடைய தீர்மானம். அதற்கு அப்பால் அதை முடிவு செய்யும் உரிமை வேறு யாருக்கும் இல்லை. இந்த மணியக்காரர் உட்பட...

## காட்சி-6

[மணவாளன் எடுத்தெறிந்து பேசிய பேச்சுக்கு மறு நாளே விளைவு இருந்தது. மணவாளனோ கோதையோ அப்படி எதிர் பார்க்காவிட்டாலும், மணியக்காரர் மூட்டிவிட்ட கனல் அரசனிடம் தன் வேலையைக்

காட்டியது. மறுநாள் பொழுது விடிவதற்கு முன்னரே பாளையத்து அரண்மனையிலிருந்து கொலைமறவர்கள், மாடுமாடாய் வளர்ந்திருந்த பத்துப் பன்னிரண்டுபேர் மணவாளனைத் தேடிச் சத்திரத்துக்கு வந்தார்கள். மிரட்டினார்கள்.]

கொலைமறவன் ஒருவன்: (கையில் ஓர் ஓலையைக் கொடுத்து) இந்தா இதைப் படித்துப் பார். மறுபடியும் மரியாதையாக அரண்மனைக்கு வந்து எங்கள் பாளையத்து இளவரசி மோகனவல்லிக்குச் சங்கீதம் கற்பிக்கச் சம்மதமா? அல்லது இந்தக் கழைக் கூத்தியோடு சேர்ந்து இருக்கத்தான் விரும்புகிறாயா? நீ இந்தக் கழைக் கூத்தியோடு சுற்றிக்கொண்டு திரிவதைத்தான் விரும்புவாயானால், உயிருள்ளவரை நீ இந்த நாச்சியார்புரம் பாளையத்தின் ஊரெல்லைக்குள் எங்குமே நுழையக் கூடாது. மீறி நுழைந்தால் உன் தலையைத் துண்டு துண்டாக்கி விடுவோம்.

மணவாளன்: (ஓலையைப் படித்துவிட்டு அலட்சியமாய்ச் சிரித்துக்கொண்டே கிழித்துக் காற்றில் பறக்க விடுகிறான்) மிரட்ட வேண்டாம்! போய் உங்கள் பாளையத்து மன்னரிடமும் இளையராணியிடமும் இதைச் சொல்லுங்கள். பாளையத்து அரண்மனையின் அதிகாரத்தையும் அந்த அதிகாரம் எழுதப்பட்டிருந்த ஓலையையும் கிழித்துக் காற்றில் பறக்கவிட்டு விட்டான் மணவாளன் என்று போய்ச் சொல்லுங்கள். என்னைப் போன்ற சிங்கங்கள் காட்டில்தான் வாழவேண்டும். நாட்டில் வாழ முடியாது. வாழவும் விடமாட்டார்கள். தெரிந்ததுதானே? இந்த உத்திரவிலும் பயமுறுத்தலிலும் புதுமை என்ன இருக்கிறது?

அந்தக் கொலைமறவர்கள் மருண்டு நிற்கிறார்கள். அதே விநாடியில், மணவாளன் கோதையின் கையைப் பற்றி அழைத்துக் கொண்டு சத்திரத்தைவிட்டு வெளியேறு

கிறான். பின்னர் ஊர் எல்லையைவிட்டும், பாளையத்தின் எல்லையை விட்டும் வெளியேறி ஒரு மலையடிவாரத்தை அடைகிறார்கள் அவர்கள்.]

கோதை : கண்ணா! எனக்காக நீங்கள் உங்களுடைய சௌகரியங்களை எவ்வளவோ விட்டுக் கொடுத்து விட்டீர்கள். நான் அவ்வளவிற்குத் தகுதியானவளா? (இதைக் கூறுகையில் அவள் நா தழுதழுக்கிறது.)

மணவாளன் : கோதை! நீயும் நானும் இதற்கு முன் எந்தப் பிறவியிலுமே மண்ணை மிதித்து நடந்ததில்லை. பூக்களை மிதித்து அவற்றின் மென்மைகூட உறுத்தி விடுமோ என்று கூசிக்கூசி நடந்திருக்கிறோம். இப்போது இந்தக் கரடுமுரடான மண்ணில் நடப்பது எவ்வளவோ வேதனையாகத்தான் இருக்கிறது. கவலைப்படாதே! நீ என்னுடைய அபூர்வ ராகங்களுக்கு எல்லாம் இங்கித மான நாத நிலையம். உன்னை நான் ஒருபோதும் கைவிட மாட்டேன். பாளையத்து அதிகாரமும், மனிதர்களின் பொறாமையும், மண்ணுலகத்து அழுக்குக்களும் நாட்டில் நம்மை வாழவிடப்போவதில்லை. ஆனாலும் நாம் சேர்ந்து வாழத்தான் வேண்டும். காட்டிலும் மலையிலும் சேர்ந்து வாழ்வோம். மனிதர்களின் மூச்சுக் கலவாத தூய மலைக் காற்றில் உலாவுவோம். மனிதர்களின் கைபடாத சுனைத் தண்ணீரைக் குடிப்போம். மூங்கில் அரிசியையும் காட்டுக் கிழங்குகளையும் வேக வைத்து உண்போம். நாட்டு மனிதர்களின் நாகரிகமற்ற பொறாமையைஎள்ளி நகையாடிக்கொண்டே காட்டில் வாழ்வோம்...வா... இந்த அன்பு சத்தியமானது பெண்ணே...வா.

[அவளுடைய வலது கையில் தன்னுடைய வலது கையைப் பொருத்தி அவள் முகத்தைப் பார்க்கிறான் மணவாளன். அவ்வாறே உணர்ச்சி பொங்கக் கோதை யும் கைப்பற்றியபடி அவனைப் பார்க்கிறாள்.]

## காட்சி-7

*[மணவாளனும் கோதையும் பாளையத்தை அடுத்த மலைத்தொடரில் வாழ்க்கையைத் தொடங்குகிறார்கள். அதே நேரத்தில் பாளையத்து அரசில் எத்தனையோ மாற்றங்கள் நிகழ்ந்து விடுகின்றன, பாளையத்து அரசர் காலமாகிவிட்டார். மூத்த அரசிக்கு மக்கட்பேறில்லை. இளையராணியின் ஒரே பெண் மோகனவல்லியே எல்லா அதிகாரங்களுக்கும் வாரிசாகிவிடுகிறாள். அவள் பொறுப்பேற்றதும் மறுபடி மணவாளனைத் தேடும் படலம் தொடர்கிறது]*

மோகனவல்லி: யார் அது? ஏதாவது செய்தி உண்டா?

ஒருவன்: ஆம் தாயே! நாங்கள் வேட்டையாடுகிற மறவர்கள், நேற்று மலையில் வேட்டைக்குப் போயிருந்த போது......(மேலே கூறத்தயங்குகிறான்)

மோகனவல்லி: என்ன தயக்கம்? நேற்று என்ன ஆயிற்று?

ஒருவன்: ஒன்றும் ஆகவில்லை தாயே... அங்கே நாங்கள் பார்க்க நேர்ந்த ஒரு காட்சி...

மோகனவல்லி: என்ன பார்த்தாய்? சொல்... பயப்படாதே!

ஒருவன்: அந்தக் கழைக் கூத்திப் பெண்ணையும் பாட்டுக்கார மணவாளனையும் அங்கே பார்த்தோம். அவர்கள் அங்கே ஒன்றாக இணைந்து வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள் தாயே...

மோகனவல்லி: (பெருமூச்சுடன்) அப்படியா செய்தி? சரி நீ போகலாம்.

(அவர்கள் போகிறார்கள்)

மோகனவல்லி: (தனக்குள் கறுவியபடி) என்னை விட்டு எவ்வளவு தூரம் போய் விடுவாய் திமிர்பிடித்த

இளைஞனே! உன்னை உடனே வழிக்குக் கொண்டுவருகிறேன் பார்...
(உரத்த குரலில்) ஏய் யாரங்கே?

(சேவகர் வருகின்றனர்)

மோகனவல்லி: அரண்மனைக் காரியஸ்தரை உடனே அழைத்துவா... போ... அப்படியே வனபோஜனத்துக்குப் போனவர்கள் திரும்பிவிட்டார்களா என்றும் பார்த்து வா...
(அவர்கள் போகிறார்கள்)

மோகனவல்லி: (தனக்குள்) 'இசைப்பாடு என்று என் இதயமே தானாகப் பொங்கி மேலெழுந்தாலொழிய நான் எதையும் எதிர்பார்த்து யாரையும் பாடுவதில்லை' என்று நெஞ்சை நிமிர்த்தித் தன்மானம் பேசினாயல்லவா, இளைஞனே... உன்னையே தன் முன் பாட வைக்கப் போகிறாள் இந்த மோகனவல்லி... பார்...
(காரியஸ்தரும் இன்னும் சிலரும் வருகிறார்கள்)

காரியஸ்தர்: என்ன இளவரசியாரே! அழைத்தீர்களாமே!

மோகனவல்லி: ஆமாம்! மேற்கு மலைப்பக்கம் மூங்கில் காட்டுக்குத்தானே அரண்மனையைச் சேர்ந்தவர்கள் வனபோஜனத்துக்குப் போனார்கள்? நாமும் போகலாம்...சில வேட்டைக்காரர்களை வழிகாட்ட அழைத்துக்கொண்டு நமது பயணத்துக்கு ஏற்பாடு செய்யுங்கள்.

காரியஸ்தர்: ஆகட்டும் இளவரசி... இன்னும் இரண்டு நாழிகைப் போதில் புறப்பட்டுவிடலாம்... ஆட்களை அழைத்து உடன் ஏற்பாடு செய்கிறேன்.
(போகிறார்)

## காட்சி-8

[மலைத்தொடர்கள் தொடங்கும் பகுதியில் ஒரு மூங்கிற் காட்டையொட்டி நடுவாக அமைந்திருந்த செங்குத்துப் பாறையில், சுனை அருகே பர்ணசாலை போல் ஒரு

குடிசை. மோகனவல்லி அங்கு போகிருள். அவளைச் சற்றும் எதிர்பார்க்காதவனுக மூங்கிலில் புதிதாகச் செய்த புல்லாங்குழலுக்குத் துளையிட்டுக்கொண்டு மணவாளன் குடிசை வாசலில் அமர்ந்திருக்கிருன். சற்றுத்தள்ளிச் சுனைப்பிளவில் கோதை நீராடிக்கொண்டிருக்கிருள்.

தன்னருகே ஆட்களுடன் மோகனவல்லி வருவது கண்டு நிமிர்ந்து பார்த்த மணவாளன், அவளுடைய ஆணவ ஆதிகாரங்களை அலட்சியம் செய்கிற மாதிரி முகத்தைத் திருப்பிக் கொண்டு வேறுபக்கமாகப் பார்க்கிருன். மோகனவல்லிக்கு அவனுடைய அலட்சியம் சினமூட்டுகிறது, வேதனையளிக்கிறது]

**மோகனவல்லி:** நீண்ட நாட்களுக்குப் பிறகு சந்திக்கிருேம். உங்களிடம் சங்கீதம் கற்றுக் கைவிடப்பட்ட மோகனவல்லி வேறு. இப்போது நீங்கள் சந்திக்கிற இந்த மோகனவல்லி வேறு...

**மணவாளன்:** யாராயிருந்தால் எனக்கென்ன?

**மோகனவல்லி:** மரியாதையாக நடந்துகொள்ளத் தெரிய வேண்டும். இப்போது உங்கள் எதிரே வந்து நிற்கிற மோகனவல்லி இந்த நாச்சியார்புரம் பாளையத்தை ஆள்கிற இளவரசி- அவளெதிரே இவ்வளவு அலட்சியமாக நீங்கள் உட்கார்ந்திருத்தலாகாது.

**மணவாளன்:** அப்படியா? இளவரசி, மரியாதை என்பது முதலில் உங்களுக்குத் தெரிந்திருக்கவேண்டுமே? பாளையத்து இளவரசி தன் எல்லைக்கு அப்பால் காடுதேடி வந்து இப்படி மரியாதையை எதிர்பார்க்க முடியாது...

**மோகனவல்லி :** இருக்கலாம்! ஆனுல் நீங்கள் என்னிடமிருந்து எதிர்பார்த்தே ஆகவேண்டிய பெரும் பயன் ஒன்றுண்டு, கவிஞரே! நீங்களும் உங்களுடைய அபூர்வமான கலைநுணுக்கங்களும் பரம்பரை இல்லாமல் இந்தக்

காட்டிலேயே வாழ்ந்து அழிந்துபோய்விடாதபடி நான் மனம் வைத்தால் அதிகாரத்தைத் தளர்த்த முடியும்.

மணவாளன் : அப்புறம்? (கிண்டலாக)

மோகனவல்லி : தலைமுறை தலைமுறையாக ஓமகுண்டத்து அக்கினியை அணையாமல் காக்கும் முனிகுமாரர்களின் பரம்பரையைப்போல் உங்கள் கலைச் சுடரின் ஒளி அணைந்துவிடாமல் உலகத்தில் யாருக்கேனும் நீங்கள் அவற்றைக் கற்பித்துவிட்டுச் சாகலாம். என்னுடைய அதிகாரம், உங்களை நாட்டுக்குள் நுழையவிடாமல் தடுக்கிறவரை உங்களால் அதுவும் முடியாது. தன்னுடைய புத்திக்குப் பரம்பரை உண்டாக்காமல் தன்னுடனேயே அதை அழித்துக் கொண்டு சாகிற கலைஞன்; இந்த உலகத்துக்கே துரோகம் செய்தவனாகிவிடுவான். நீங்களும்கூட அப்படி ஒரு துரோகத்தை உலகத்துக்குச் செய்ய விரும்புகிறீர்கள் போலிருக்கிறது...

[எந்த உணர்ச்சியைத் தாக்கினால் ஒரு கலைஞனுடைய மனம் துடிக்குமோ அதைத் தொட்டுவிட்டாள் மோகன வல்லி... மணவாளன் சற்றே கலங்கிப்போனான்... மௌனம், பெருமூச்சு...இவை தொடர்கின்றன]

மோகனவல்லி : இன்னிசைக் கலைஞரே! உங்களைத்தான் கேட்கிறேன். இப்போதுகூட நீங்கள் மனம் வைத்தால் உங்கள் புத்திக்குப் பரம்பரை உண்டாக்கும் உரிமையும் இந்தக் காட்டு வாழ்க்கையிலிருந்து வெளியேறி மனிதர்களிடையே உங்கள் திறமைக்குரிய புகழ் வெள்ளம் பெருகும்படி நாட்டுக்கு வந்து வாழும் உரிமையும் உங்களுக்குக் கிடைக்கும்.

மணவாளன் : எந்த விதத்தில் அதை நான் எதிர்பார்க்க முடியும்?

மோகனவல்லி : உங்களைப் போன்ற பேரழகு வாய்ந்த ஒரு கலைஞர் நாச்சியார்புரம் பாளையத்திலிருந்து எதை யெல்லாம் வேண்டுமென்று எதிர்பார்க்கிறீர்களோ

அவையெல்லாம் உங்களுக்குச் சுலபமாகக் கிடைத்திருக்கும்.

மணவாளன் : ஏன் கிடைக்கவில்லையோ?

மோகனவல்லி : ஏனு? அது உங்களுக்கே தெரியுமே! எவளோ ஒரு நாடோடிக் கழைக் கூத்தியிடம் மயங்கி நீங்கள் அரண்மனையைக் கேவலப்படுத்தினீர்கள்...

மணவாளன் : யார் நாடோடி? கோதை என் காவிய நாயகி. அவளைப்பற்றிக் கேவலமாகப் பேசுகிறவர்கள் எந்தப் பாளையத்தை ஆள்கிறவர்களாலும் நான் பொறுத்துக்கொள்ள மாட்டேன். எங்களுக்கு நாட்டில் வாழும் உரிமை வேண்டாம். உலகம் உயர்த்துகிற புகழ் வேண்டாம். நாங்கள் மண்ணுலகத்து மனிதர்களைப் பார்த்துப் பழகி எங்கள் கலைகளுக்குப் பரம்பரையும், தேடவேண்டாம். ஆனுல் நாங்கள் பிறவி பிறவியாகச் சேர்ந்தே வாழ்வோம். எங்களை எவராலும் பிரிக்க முடியாது. நாங்கள் அழிவற்ற நித்தியமான அன்பை ஆளுகின்றவர்கள். அதைத் தெரிந்து கொள்ளுங்கள்.

மோகனவல்லி : அப்படியானுல் உங்களுக்கு இந்தக் காட்டைத் தவிர வேறு கதியில்லை கவிஞரே! நீங்கள் மட்டும் தனியாகப் புறப்பட்டு வருகிறதாயிருந்தால், நாச்சியார் புரம் பாளையத்தின் பல்லாயிரம் மக்களும் உங்களைப் புகழ்ந்து போற்றித் தலைவணங்க எப்போதும் காத்திருப்பார்கள். மேற்குப் பக்கமும், வடக்கும் தெற்கும் பயங்கரமான வனமும் மலைத்தொடர்களும்தான் இருக்கின்றன. அந்த மலைத்தொடர்கள் முடியுமிடத்தில் கடல் தொடங்கிவிடுகிறது. கிழக்குப் பக்கமாக நீங்கள் உலகத்து வாழ்க்கையில் புகுந்து கலக்கவிரும்பினுலோ நாச்சியார்புரம் பாளையத்தில் நுழையாமல் அது முடியவே முடியாது. எனவே உங்கள் நிலையை நீங்கள் இப்போது தீர யோசிக்க வேண்டும்.

மணவாளன் : யோசிப்பதற்கு எதுவுமே இல்லை! உலகத்து மனிதர்களிடையே உலகத்தோடு கலந்து வாழ நாங்கள் விரும்பவில்லை. மனிதர்களிடமிருந்து விலகி வேறுபட்டு வாழ்ந்தாலும் நாங்கள் நினைப்பாலும்பாவனைகளாலும் பழக்கத்தாலும் தேவர்களாக வாழ்கிறோம். இப்படியே எங்களை வாழவிடுங்கள். எங்களிடமிருக்கும் அபூர்வ மான கலை நுணுக்கங்களும் எங்களோடு சேர்ந்தே அழிந்து போகட்டும்.

மோகனவல்லி : (சீற்றத்தோடு) அப்படியா? உங்கள் பிடிவாதம் மாறாத பட்சத்தில் அப்படித்தான்... அந்த அபூர்வமான கலைநுணுக்கங்கள் இந்தக் காட்டோடு அழிந்து போக வேண்டியதுதான்...

கோதை : இல்லை! நிச்சயமாக இல்லை. அவருடைய தெய் வீகக் கலை நுணுக்கங்கள் ஒருநாளும் அழியப் போவ தில்லை.

மணவாளன் : (திரும்பி) யார்! கோதையா?
[நீராடிய கோலத்தில் வந்து நின்ற கோதையைப் பார்த்ததும் பாளையத்து இளவரசியின் பார்வை பற்றி யெரிந்தது. அவளுடைய பொறாமை கடுஞ்சொற்களாக வெளிப்போந்தது]

மோகனவல்லி : (கோதையைப் பார்த்து) இந்த மகா கவிஞருடைய வாழ்க்கை இப்படி ஒடுங்கிப் போகும்படி இவருக்குச் சத்துருவாக வாய்த்த சபலம் நீதானடி பெண்ணே! அவ்வாறிருக்கும்போது நீயே எப்படி இவருடைய கலை நுணுக்கங்கள் அழியாமல் உலகத்தில் பரவுவதற்குத் துணை செய்ய முடியும்?

கோதை : எப்படியோ முடிகிறதா இல்லையா என்பதை நீயும் பார்க்கத்தானே போகிறாய்? ஒரு செயலைத் தீர் மானமாகச் செய்ய முடிவு கொண்டவர்கள் அதை

வார்த்தைகளில் பின்னிப் பின்னிச் சொல்லிக் கொண் டிருக்க மாட்டார்கள்.

[ஆத்திரத்துடன் இளவரசியும் ஆட்களும் திரும்பி நடக்கிறார்கள்.]

மணவாளன் : என்ன சொல்கிறாய் கோதை? இவள் இப்படி ஆத்திரத்தோடு திரும்புகிறாளே...

கோதை : வாருங்கள் கண்ணா...காலம் வரும்.
[மணவாளன் புரியாமல் நிற்கிறான்]

## காட்சி-9

[அன்றும் ஒரு வெள்ளிக்கிழமை, மங்கலமான தன்மை கள் எல்லாம் நிறைந்த நாள் அது. கோதையும் மணவாளனும் வேனில் விழாவில் கண்கலந்ததும் அதே வெள்ளிக்கிழமையொன்றில்தான், காலையில் பொழுது புலர்ந்ததும் குடிசைக்கருகே மகிழமரத்தின் அடியில் உதிர்ந்து கிடக்கும் பூக்களைத் திரட்டிவந்து பொற்சர மாகத் தானே மாலை தொடுத்துக்கோதையின் கழுத்தில் சூடுவான் மணவாளன். அன்றும் அவ்வாறே...]

கோதை : ஓ...இன்று வெள்ளிக்கிழமை...மகிழம் பூ மணக் கிற நாளல்லவா இன்று?

மணவாளன் : நமக்கு எல்லா நாட்களுமே மணக்கின்ற நாட்கள்தானே கண்ணே. ஆனாலும் வெள்ளிக்கிழமைக் குக் கூடுதலான மணம் உண்டே...?

[இனிய நினைவுகள் மேலெழ, மணவாளனை வணங்கு கிறாள் கோதை. வணங்கி எழுகிறவளின் கழுத்தில் வழக்கம்போல் மகிழ மலர் மாலையைச் சூட்டுகிறான் மணவாளன்.]

கோதை : சரி கண்ணா! நான் சுனைக்குப்போய் நீராடிவிட்டு வருகிறேன்...

மணவாளன் : சீக்கிரம் வந்துவிடு! நானும் சற்று நேரம் மூங்கில் காட்டில் உலாவிவிட்டு வருகிறேன்.

[திரும்பிய மணவாளன் இன்னும் கோதை வரவில்லையே என்று பரபரக்கிருன்.]

மணவாளன் : கோதை! கோதை! இன்னுமா நீராடி முடியவில்லை...ஐயோ உனக்கு நீந்தத் தெரியாதே... முதலை மடுப்பக்கம் போகாதே என்று பலமுறை சொல்லியிருக்கிறேனே கோதை...

(சுனையை நோக்கி ஓடுகிருன். அங்கே நீராடுகிற அரவம் இல்லை. சுனைக் கரையில் பறித்துவைத்த தாமரைப் பூவோடு குடம் மட்டும் இருக்கிறது. முதலை மடுவின் நீர்ச்சுழிப்பில் சற்று முன் அவன் அணிவித்த மகிழமலர் மாலை மட்டும் மிதந்து தத்தளிக்கிறது. பார்த்ததும் கதறுகிருன்.)

மணவாளன் : அடி பாவீ! கோதை! என்ன காரியம்செய்து விட்டாயடி பாவீ...

[மலைப்பகுதியெங்கும் மணவாளனின் குரல் எதிரொலிக்கிறது. குடத்தின் அருகே, தாமரைமலரோடு சில ஓலைகள் வைக்கப்பட்டிருக்கின்றன. அவன் குமுறியழுதபடி அவற்றை எடுத்துப் படிக்கிருன்.]

மணவாளன் : (படிக்கிருன்) என் ஆருயிர்க் காதலர்க்கு அநேக வணக்கங்கள்...அடிப் பாவி...இது என்ன கடிதமடி...(மேலே படிக்கிருன்)...இந்த ஓலைகளை நீங்கள் எடுத்துப் படிக்கும்போது முதலை மடுவின் குளிர்ந்த நீரில் என் ஆவி கலந்து போயிருக்கும். உங்கள் பாதங்களில் சூடுவதற்காக இந்த ஓலையோடு இரண்டு தாமரைப் பூக்களையும் பறித்து வைத்திருக்கிறேன். உங்கள் பாதங்களைத் தழுவிக் கொண்டே சாகவேண்டுமென்று எனக்கு ஆசை. அவற்றைத் தழுவ முடியாத காரணத்தால் அவற்றைப் பற்றிய புனிதமான நினைவு

களைத் தழுவிக் கொண்டே சாகிறேன். என்னுடைய புண்ணியப் பயன்களும், நான் நினைத்த நினைப்புக்களும் பரிசுத்தமாக இருக்குமானால் இன்னொரு பிறவியில் உங்களைப் பரிபூரணமாக அடைவேன். நீங்கள் அபூர்வ கவி, அபூர்வராகங்களின் பிறப்பிடம். பேரழகர், தீர ஆடவர், சுந்தரமான நினைவுகளைச் சுமந்துகொண்டு திரிகிறவர். என் ஒருத்தியின் பொருட்டு இந்தக் காட்டிலிருந்து வெளியேறவே முடியாமல் நீங்களும் உங்கள் திறமைகளும் அழிந்து வீணாவதை நான் எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? தர்மபத்தினியாக இருக்கிறவள் கணவனுக்காகத் தன் உயிரையும் தியாகம் செய்து கணவனுடைய ஒற்றை உயிரோடு தானும் இரண்டறக் கலந்து விடலாம். நேற்று அந்தப் பாளையத்து இளவரசி உங்களைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தவற்றையெல்லாம் கேட்டேன். நீங்கள் நாட்டு எல்லைக்குள் புகுந்து புகழ்பெறத் தடையாக இருப்பவள் இழிகுலத்தினளாகிய இந்தப் பேதைக் கழைக் கூத்திதான் என்பதை என் செவிகளாலேயே கேட்டேன். நான் உங்கள் தடந்தோள்களில் மணக்கப் பிறந்த பூமாலை. நீங்களில்லாது எனக்கு உலகமில்லை. நான் செத்தொழிந்த மறு விநாடியிலிருந்து உங்கள் புகழ் உலகெல்லாம் பரவி நீங்கள் பெருமை பெறுவதை ஆவியாக இருந்து பார்க்கக் காத்திருப்பேன். 'சீதமதி முகமும் சீர்முத்துப் புன்னகையுமாகக்' கழைக் கூத்தாடும்போது முதன் முதலாக உங்கள் கண்களுக்கு எப்படித் தோன்றி உங்களைக் கவி பாட வைத்தேனோ அப்படியே இடைவிடாமல் உங்கள் நினைவில் நான் புன்னகையோடு இருப்பேன். என்னை வாழ்த்தி வழியனுப்புங்கள். மீண்டும் அடுத்த பிறவியில் உங்கள் பாதங்களைத் தொழுவதற்குப் பிறக்கிறேன். அதுவரை என்னை மன்னித்துக் கொண்டிருங்கள்.

'தன்னுடைய புத்திக்குப் பரம்பரை உண்டாக்காமல் தன்னுடனேயே அதை அழித்துக் கொண்டு சாகிற கலைஞன் இந்த உலகத்துக்குத் துரோகம் செய்தவனாகி

விடுவான்' என்று நேற்றுப் பாளையத்து இளவரசி கூறிய வார்த்தைகளை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நான் உங்களுக்காகவே பிறந்தவள்.

உங்கள் அடியாள்
கோதை

[படித்து முடித்ததும் ஓலை மணவாளனுடைய கையி லிருந்து நழுவி வீழ்ந்தது. அவனுடைய கண்முன்னால் மலைகள், குடம், தாமரைப்பூக்கள், மடுவில் சுழித்துக் கொண்டிருந்த மகிழ மலர்ச்சரம் எல்லாமே சுழல் கின்றன]

மணவாளன் : (அடக்கமாட்டாத ஆத்திரத்தோடு) அடிப் பாவி! இப்படியா செய்து விட்டாய்? இந்தப் பாழாய்ப் போன பாளையத்து இளவரசி ஏன் இங்கு வந்தாள்? இத்தனைகாலத்துக்குப் பிறகு இங்கே எதற்காக என்னைத் தேடிவந்தாள்? ஏன், என்னுடைய கலையுணர்ச்சியின் இழப்பை எனக்கு நினைவூட்டித் தொலைத்தாள்...? (புலம்புகிறான் அழுகிறான்)

## காட்சி-10

[கோதை காவியமாகி நீண்ட நாட்களாகிவிட்டன. மூங்கில் காட்டிலும் மலையடிவாரத்திலும் சுனைக்கரை யிலும் பித்தனைப்போல் திரிந்து கொண்டிருக்கிறான் மணவாளன். அவனுக்கு மனநிம்மதி தருகிற ஒரே நாள் இன்னும் வெள்ளிக்கிழமை மட்டும்தான். அப்படியொரு வெள்ளிக்கிழமையில் விடியுமுன்பே எழுந்து மலையடி வாரத்து மகிழமரங்களின் அடியில் உதிர்ந்து கிடக்கும் பூக்களை அள்ளிக் கொணர்ந்து அழகிய மாலையாகக் கோத்து, அந்த மாலையைக் கோதையை விழுங்கிய முதலை மடுவில் போடுகிறான்.]

மணவாளன் : (தன்னுரை) கோதை! எத்தனை வெள்ளிக் கிழமைகள் வந்துபோய் விட்டன! மடுவின் நீர்ப்பரப்

புக்கு மேலே மூழ்கியெழுபவளைப் போல நீயும் எத்தனை காலம்தான் இந்த மகிழமலர் மாலையைக், கழுத்தில் தாங்கிக் கொள்ளப் போகிறாய்? (பெருமூச்சு விடுகிறான்) [யாரோ பின்னால் வருவது போல் அரவம் கேட்டுத் திரும்புகிறான்]

காரியஸ்தர் : ஐயா...அரண்மனையிலிருந்து வருகிறோம்.

மணவாளன் : என்ன செய்தி இன்னும்? எல்லாம்தான் முடிந்து போயிற்றே!

காரியஸ்தர் : மன்னிக்கவேண்டும். தாங்கள் மீண்டும் நாட்டுக்குத் திரும்பி வந்து விருப்பம்போல் அரண்மனைக் கலைஞராக இருந்து தங்கள் கலைகளையும் புகழையும் வளர்க்க வேண்டும் என்று பாளையத்து இளவரசியார் விரும்புகிறார்கள். தங்களிடம் இதைத் தெரிவித்து அழைக்கச் சொன்னார்கள்.

மணவாளன் : (அலட்சியமாக) வருவதும், வராததும் என்னுடைய விருப்பம்! போய்ச் சொல்லுங்கள் உங்கள் இளவரசியிடம்...மணவாளனுடைய அபூர்வராகங்கள் எந்த நினைவுகளிலிருந்து செழித்தனவோ அந்த இனிய நினைவுகள் இந்த முதலை மடுவிலேயே மூழ்கிவிட்டன என்று போய்ச் சொல்லுங்கள்.

அவனுடைய பண்ணும் பாட்டும் கலையும் கற்பனைகளும் இந்த மலையடிவாரத்துச் சுனையைச் சுற்றியே வட்டமிடுகின்றன. அவன் இந்த உலகத்தையும், உலகத்து மனிதர்களையும் பார்க்கவே கூசுகிறான். மணவாளனுக்கு அவர்களைப் பிடிக்கவில்லை. அவன் அவர்களைத் தொழவோ மதிக்கவோ விரும்பவும் இல்லை. உலகத்தில் வகை வகையாக மனிதர்கள் வகுத்துக் கொண்டிருக்கின்ற பொய்யான உயர்வு தாழ்வுகளையும் போலிக் கௌரவ முறைகளையும் பார்த்து அவன் பயப்படுகிறான். அவனை இந்த உலகத்துக்கு மறுபடியும் அழைக்க வேண்

டாம். மணவாளனுடைய குரல் எந்த வெள்ளிக் கிழமையாவது இந்த மலை முகட்டிலிருந்து ஒலிக்கத் தவறினால் அன்று அவன் போய் விட்டான் என்று புரிந்து கொள்ளுங்கள்...என்று உங்கள் தேவியிடம் போய்ச் சொல்லுங்கள். இங்கே இனியும் நிற்க வேண்டாம். போய்விடுங்கள்...

(வெகு அலட்சியமாக அவர்களைப் போகச் சொல்லி விட்டு, வீசுகிற மலைக்காற்றுக்கு' நடுவே சின்னஞ் சிறு அகல் விளக்கைப் பொருத்தி வைக்கிறான். தீபவர்த்தினி ராகம் அங்கே அவனிடமிருந்து சுகமாகச் சுழன்று வருகிறது.)

## காட்சி-11

*அரண்மனை*

(காரியஸ்தர்கள் வந்து சேதி சொன்னபோது பாலையத்து இளவரசியின் கண்கள் கலங்குகின்றன. காரியஸ்தர்களுக்கே வியப்பூட்டுகிறது அந்தக்கண்ணீர்)

ஒரு முதியவரான காரியஸ்தர் : (இளவரசியைத் தனியே சந்தித்து)...என்ன தாயே? எதற்கு இந்தக் கலக்கம், கண்ணீர்? இதன் அந்தரங்கம்தான் என்ன? சொல்லுங்கள் இளவரசி!

மோகனவல்லி : தாத்தா! எனக்கு அந்தக் கலைஞர்மேல் அளவுகடந்த வெறுப்பு என்று நீங்கள் எல்லோரும் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். உண்மை அது வில்லை. அந்தச் சுந்தரக் கலைஞரிடம் எனக்கு இருக்கும் பிரேமை அசுரத்தனமான பிரேமை. நான் அவர் மேல் பிரியப்படுகிற காரணத்தால் அதே விதமான பிரியத்தை அவர் மேலோ அவரிடமிருந்தோ கொள்கிறவர்கள் இந்த உலகில் வேறு எவரும் இருக்கக் கூடாது என்று எண்ணினேன். கழைக் கூத்திப் பெண் கோதை அதற்கு அப்படியொரு தடையாக இருந்தாள். அவளை அவரிட மிருந்து பிரித்துவிட எண்ணினேன். அதற்காகத் தமது

கலையுணர்ச்சியின் இழப்பை அவர் உணரும்படி செய்தேன், என் முயற்சி பலிக்கவில்லை. ஆனால் அந்தப் பெண் கோதை அவர்மேல் கொண்ட பிரியம்தான் என் அன்பைவிட உயர்ந்தது. அவள் அவருடைய கலைத் திறமையையும் சேர்த்து வணங்கினாள். அதனால்தான் அந்தத் திறமை உலகில் பிரகாசிக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்துக்காகத் தன் உயிரையும் தியாகமாகக் கொடுத்து விட்டாள். அவள் தெய்வலோகப் பெண்களின் வகையைச் சேர்ந்தவள். அதனால்தான் அவளுடைய காதல் அப்படி உயர்வானதாக இருந்தது. நான் வெறும் மானிடப் பெண்தான். மணவாளனை வெறுப்பது போல் உலகத்துக்குக் காண்பித்துக் கொண்டு அந்தரங்கமாக அவரைக் காதலித்தேன். ஆனால் அந்த மகா கவிக்காக எதையும் விட்டுக்கொடுக்கத் தெரியவில்லையே எனக்கு? நான் பாளையத்து ராணியாக இருந்தும் பேதையாய் வெறும் மானிட ஞாபகங்களோடு இருந்து விட்டேன்...என்னைவிட அந்தப் பெண் கோதைதான் உயர்ந்தவள்...தாத்தா...(பொங்கி அழுகிறாள்.)

காரியஸ்தர் : அழவேண்டாம் தாயே! உங்கள் வேதனையான அந்தரங்கம் புரிகிறது...அமைதியாய் இருங்கள் இளவரசி! நான் ஏதேனும் செய்யப் பார்க்கிறேன்... [கனத்த இதயத்தோடு வெளியே செல்கிறார் அந்த முதியவர்]

## காட்சி-12

### இடம்:-வனம்

[கோதை மறைவுக்கு பிறகு மாதங்கள் ஓடிவிடுகின்றன. பங்குனி, சித்திரை, வைகாசி ஆனியும் போய் ஆடி மாதம்...முதல் வெள்ளிக் கிழமை...அசுரத்தனமான ஆடிக்காற்றில் சடசடவென்று மூங்கில்கள் முறிகின்றன. மலைப் பாறையில் ஆடிக் காற்றின் வேகத்தைத் தாக்குப் பிடித்து நடக்கவே தடுமாறுகிறான் மணவாளன். காற்றின் வேகத்தில் மகிழம் பூக்களைக் குவியலாகவே

கண்டான் அவன். பூக்களை அள்ளிக் கொண்டு குடிசைக்கு வந்து மாலைகட்டி சுனையில் போய் வழக்கம் போல் அந்த மாலையைப் போட்டு அஞ்சலி செலுத்து கிறான். அகல் விளக்கைப் பொருத்துகிறான்.]

மணவாளன் : கோதைப் பெண்ணே! இந்த அகல் விளக்கின் சுடர் எந்தக் கடும் காற்றிலும் அணைந்துவிடாமல் காத்துத் தவிக்கிறேன். தீபவர்த்தினியில் இசை பொழி கிறேன்...

[பாடுகிறான்...அதற்கு முன் எந்த நாளிலும் அத்தனை ஆக்ரோஷமாக மணவாளன் முனைந்து பாடியதில்லை. பாடிக்கொண்டே இருக்கிறான். நடுப்பகலுக்குப் பின் மலைகளின் முகடுகளில் எதிரொலித்த மணவாளனின் குரல் மெல்லத் தேய்ந்து மங்குகிறது...மலையில் காற்றும் தணிந்துபோய் விடுகிறது. மணவாளனின் சொல் இப் போது அங்கு கேட்கவே இல்லை.

முதலை மடுவுக்கு நீர் பருக வருகிறார்கள் சில வேட்டை மறவர்கள்...]

ஒருவன் : அண்ணே! அங்கே பாரு...அந்த ஆளு தூங்குறானா என்ன?

மற்றவன் : [பாறையில் சாய்ந்தபடி இருந்த மணவாளனைத் தொட்டு எழுப்புகிறான்] தம்பி! எழுந்திருங்க தம்பீ...

[அவனுடைய உடல் தரையில் சரிகிறது. கடைவாயில், தீபவர்த்தினி என்ற ராகத்தின் பரிபூரணமான எல்லையைத் தொட்டுத் தானே தனக்குள் எரிந்து பொங்கினாற் போல் செக்கச் செவேலென்று குருதி வடிந்திருக்கிறது. காலடியில் இரண்டு தாமரைப் பூக்கள், கல்லிடுக்கில் திரியுட்பட எரிந்து அகலவிளக்கும் அடங்கியிருக்கிறது.]

ஒருவன் : அண்ணே! வாங்க ஒடனே அரமணைக்குப் போவணும்...அங்கே போயிப் பாட்டுக்காரத் தம்பி செத்துக் கெடக்குன்னு சொல்லணும்...வாங்க...

[போகிறார்கள்]

## காட்சி-12

[மறவர்கள் சேதி சொல்ல மோகனவல்லி பேயறைந்தவள் போல் துடிக்கிறாள். மௌனமாகிறாள்.]

மோகனவல்லி : தாத்தா! உடனே புறப்படுங்கள், எனக்குத் துணை வாருங்கள். மலையடிவாரத்துக்குப் போக வேண்டும் [விம்முகிறாள்]

காரியஸ்தர் : இவ்வளவு அகாலத்தில் இருட்டிலா அம்மா?

மோகனவல்லி : ஆமாம்! புறப்படுங்கள். தாமதிக்காதீர்கள். [எல்லோரும் புறப்படுகிறார்கள். மலையடிவாரத்தில் தூங்குகிறாற்போலக் கிடக்கும் மணவாளனைப் பார்த்து விம்மி வெடிக்கிறாள் மோகனவல்லி]

காரியஸ்தர் : அழாதே தாயே! கதறி அழுது என்ன பயன் இந்த உலகில் மிக அபூர்வமான கலைஞர்களெல்லாம் உயர்ந்த மணமுள்ள நல்ல பூக்களைப் போல் பூத்து விரைவாக வாடி உதிர்ந்து போய்விடுகிறார்கள். இந்த உலகம் மிகவும் துரதிருஷ்டமுள்ள உலகம் அம்மா! அபூர்வமான சாமர்த்தியங்கள் எல்லாம் இங்கே அதிக நாள் தங்குவதில்லை.

மோகனவல்லி : [துயரம் பீறிடுகிற குரலில்] ஐயா! இந்த மலையடிவாரம் மிகவும் பாக்கியம் செய்த இடம். இந்த இடத்தில் இரண்டு தேவர்கள் தங்கள் ஆயுள் பரியந்தம் வாழ்ந்திருக்கிறார்கள். இல்லை! இல்லை! ஆயுள் பரியந்தம் முழுமையாக வாழ்ந்து இந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த உலகத்தை அதிர்ஷ்டமுள்ளதாக்கத் தயங்கிக் கொண்டு பிஞ்சிலேயே வாடிப் போய்விட்டார்கள். அந்தத் தெய்

வீகக் கலைஞர்களுக்குப் பாளையத்து அரண்மனையிலிருந்து செலவழித்து இங்கே ஒரு மண்டபம் கட்டவேண்டும். அந்த மண்டபம் அவர்களுடைய கோயிலாயிருக்கும். அதில் வெள்ளிக் கிழமை தவறாமல் விளக்கேற்றவும் மான்யம் எழுதிவைக்க வேண்டும். இந்தப் பக்கம் நாச்சியார் புரத்து மக்கள் எவராலும் மலையடி வாரத்து மகிழ மரங்களிலிருந்து கை நிறையப் பூக்களை அள்ளி வந்து இந்தச் சுனையில் தூவிக் கைகூப்பி வணங்கி விட்டுத்தான் இவ்வழியில்மேலே நடந்து செல்ல வேண்டும். இந்தக் கட்டளையை எவரும் மீறலாகாது...காலம் காலமாக இந்தக் கட்டளை நீடிக்க வேண்டும். இங்கே அமரபதவிஅடைந்த தெய்வீகக் காதலர்களை உலகம் என்றென்றும் மறக்காமலிருக்க இந்த வழக்கங்கள் துணைபுரியும்.

காரியஸ்தர் : அப்படியே செய்யலாம் அம்மா! உங்கள் கட்டளைப்படியே சாஸனம் எழுதச் செய்கிறேன் இப்போது அகாலமாகிறது. அரண்மனைக்குத் திரும்பலாமா அம்மா?

மோகனவல்லி : [ஒரு சோகச் சிரிப்புடன்] ஆம்! போகலாம் ஒரு விநாடி பொறுத்திருங்கள். இதோ வந்துவிட்டேன். [சுனையிலிருந்து இரண்டு தாமரை மலர்களைப் பறித்துப் பயபக்தியோடு மணவாளனின் பாதங்களில் ஒற்றி வணங்குகிறாள். முதலை மடுவின் சுழிப்பருகே சென்று அங்கே மணவாளன் போட்டிருந்த மகிழம்பூச்சரம் மிதப்பதையே சற்று நேரம் பார்த்துக் கொண்டு நிற்கிறாள்.]

முதியவர்: வாருங்கள் தாயே! போகலாம். நேரமாகிறதே...!

மோகனவல்லி: (அதைக் காதிலேயே வாங்கிக்கொள்ளாதவளாய்) நான் தெரியாத்தனமாய் இதுவரை மனிதர்களோடு மனிதர்களாக இருந்து உங்களுக்குக் கெடுதல்கள் செய்து விட்டேன். நீங்களோ, மனிதர்களோடு

மனிதர்களாக இருந்த காலத்திலும் தேவர்களாக வாழ்ந்து பெருமை பெற்றீர்கள். உங்களை நெருங்கவும் எனக்கு யோக்யதை இல்லை. ஆனால் உங்கள் அருகில் இருந்து உங்களைத் தொழுது வணங்கிக் கொண்டே இருக்கும் உரிமையையாவது எனக்கு அளியுங்கள்... என்னையும் உங்களோடு தேவர்களாகச் சேர்த்துக் கொள்ளுங்கள்...

(கதறிக்கொண்டே, யாரும் எதிர்பார்க்காதபோது தானும் திடுமென அந்த முதலை மடுவில் பாய்ந்து விடுகிறாள் மோகனவல்லி.)

காரியஸ்தரின் அலறல் மற்றவர்களின் ஆற்றாமைக் குரல் மலைகளில் எதிரொலிக்கிறது. இளவரசியை முதலைமடுவிலிருந்து யாராலும் மீட்க முடியவில்லை. அப்படி முயல்வது கூட ஆபத்தானதாக இருந்தது.

அங்கே சோகமயமான மௌனம் அரசோச்சுகிறது. மலையடிவாரத்துக் காற்றில் தீபவர்த்தினியும் நீலாம்பரியும் இனிய குரலில் ஒலிப்பது போல் அடிக்கடி ஒரு பிரமை ஏற்படுகிறது.

நாச்சியார்புரம் பாளையத்து அரசமாளிகை மெல்ல மெல்ல இருள் சூழ்ந்து போகிறது. அதே நேரத்தில் மலையடிவாரத்து மண்டபத்தில் அகல்விளக்குகள் பலப்பலவாய்ப் பிரகாசிக்கத் தொடங்குகின்றன.

[பாளையம் வழித்தோன்றல்கள் இல்லாமல் நலிந்து ஒடுங்குகிறது. வழிபோக்கர் இருவர் பேச்சு.]

யாரோ வழிப் போக்கர் சொல்கிறார்: சத்திய கவிகளின் வயிற்றெறிச்சலைக் கொட்டிக் கொண்டவர்கள் அதற்குப் பிரதிபலன் அனுபவிக்காமல் போகமாட்டார்கள்.

மற்றவர்: ஆமாம் தம்பி: இதற்கு இந்த மணவாளன் கோதை வரலாறே இசுகே ஒரு சத்தியமான சாட்சியாகி விட்டதே!

திரை

# கோதையின் காதல்

## நாடக விளக்கம்

காலம்:- பாளையக் குறுநில மன்னர்கள் காலம்.

இடம்:- நாச்சியார்புரம், எட்டுப்பாளையத்தலைக்கட்டு.

களங்கள்:- அரண்மனை, சத்திரம், வசந்தமாலையம்மன் கோயில் மூன்றில் மூங்கில்புதர், சுனையடி, மலைச்சாரல், நந்தவனம், வேனில்விழா நிகழிடம். முதலைமடு.

பாத்திரங்கள்:- கழைக்கூத்தியின் தந்தை, கழைக்கூத்தாடும் கோதை, கவிஞன் மணவாளன், சத்திரத்து மணியக்காரர், இளவரசி மோகனவல்லி, அரண்மனைக்காரியஸ்தர், கொலை மறவர், பாளையத்தரசர்கள், வழிப்போக்கர்கள், வேடர்கள்.

# வழித்துணை

## காட்சி 1

*['மணிமாலை இதழ்' அலுவலகம். பெரும்பகுதி காலியான ஓர் அறை. ஓடிகொலோன் நறுமணம் அறை முழுவதும் பரவியிருக்கிறது. ஒரு மூலையில், தரையில் சிறிய பட்டு மெத்தை விரித்து அதன்மேல் வீணை ஒன்று உறங்கிக் கிடக்கிறது. மற்றொரு மூலையில் சுவரோரமாக இருந்த மேஜையில் தொலைபேசியும், எழுதுவதற்கான வெள்ளைக் காகிதங்களும், கடித உறைகளும் குண்டூசிகளும் அச்சுக் காகிதங்களும் நிரம்பிக்கிடக்கின்றன.*

*இருப்போர் மணிமாலை வார இதழின் ஆசிரியரான அந்தகர் குமாரகவி அலுவலக மேலாளர். ஒரு பெண் உள்ளே வருகிறாள்.]*

**வந்தவள்:** என் பெயர் சுகுணா. மணிமாலைக்குக் காரியதரிசி ஒருவர் வேண்டும் என்று விளம்பரம் பார்த்தேன்.

**மேலாளர்:** அப்படியா...வா அம்மா!... அதோ அந்த நாற்காலியில் சற்று உட்கார்.

**குமாரகவி,** *(கறுப்புக்கண்ணாடியைச் சரிசெய்தவாறே)*.. யார்? யார் வந்திருக்கிறார்கள்?

மேலாளர்: காரியதரிசி வேண்டுமென்று நாம் செய்த விளம்பரத்தைப் பார்த்து விட்டு இந்தப் பெண்மணி நேரில் வந்திருக்கிறார், ஐயா!

குமாரகவி: அப்படியா! மகிழ்ச்சி! வரட்டும்...

சுகுணா: இந்த வாரம் 'மணிமாலை' இதழைப் பிரித்ததும் ஒரே ஏமாற்றமாகப் போயிட்டது ஐயா! உங்கள் 'திராட்சைத் தோட்டம்' தொடர் ஏன் வரவில்லை?

குமாரகவி: (சிரித்துக்கொண்டே) திராட்சைத் தோட்டம் வராததனால்தான் நீ இங்கு வந்திருக்கிறாய் என்பது உனக்குத் தெரியுமா?

சுகுணா: அதெப்படி ஐயா? நான்...நான் வந்து...

குமாரகவி: எப்படி என்பதையும் நானே சொல்லி விடுகிறேன். 'திராட்சைத் தோட்டத்'தை இரவுபகலாக என் உடனிருந்து, நான் சொல்லச் சொல்லக் கேட்டு எழுதி-எழுதியதை மீண்டும் படித்துக்காட்டி-படித்ததில் நான் திருத்தம் சொல்லி-நான் சொல்லிய திருத்தங்களுடன் மறுபடி செப்பனிட்டு அச்சுக்குக் கொடுத்துக் கொண்டிருந்த காரியதரிசி திடீரென்று என்னை விட்டுவிட்டுப் போய்விட்டான்... சொல்லாமல் கொள்ளாமல் கொஞ்சம் பணத்துடன் கம்பி நீட்டி விட்டான். இந்தக் கதையை, நான் போதாத வேளையில்தான் தொடங்கினேன் போல் இருக்கிறது. ஒரு வாரத்துக் கதையை நான் கொஞ்சம் கொஞ்சமாக அவ்வப்போது சிந்தித்துச் சிந்தித்துச் சொல்வேன். அப்படிச் சொல்லச் சொல்லக் கேட்டு எழுதி, எழுதியதை மறுபடி வாசித்து, எனக்கு மனநிறைவு தருகிற விதத்தில் மெருகேற்றி, நயமாக்கித் திருத்தி எழுதச் சொல்லி அச்சுக்கு அனுப்பிவைக்கக் குறைந்த பட்சம் வாரத்துக்கு நான்கு நாட்களாவது வேண்டும். அதற்கு அப்புறம் அந்தக் கையெழுத்துப் படியின் 'ப்ரூஃபை'

எனக்குப் படித்துக்காண்பித்து, நான் சொல்கிற திருத்தங்களைச் செய்து அச்சகத்தில் கொடுக்க மேலும் ஒரு நாளாகும். இப்படி ஒரு வாரத்துக் காரியங்கள் முடிவதற்குள் அடுத்த வாரமும் நெருங்கிக்கொண்டு வந்துவிடும். ஏற்கனவே இருந்தவன் இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப்போய்விட்டதால் எல்லாக் காரியமும் அப்படியப்படியே நின்று போய் இருக்கிறதம்மா!

சுகுணா: அதனால்தான் தொடர்கதை சில வாரங்களுக்கு வெளிவராது என்று அறிவிப்புப் போட்டீர்களா?

குமாரகவி: மனம் நிம்மதியிழந்த நிலையில் அப்படி ஓர் அறிவிப்பைப் போடச் சொன்னேன். புதிய காரியதரிசி தேவை என்று விளம்பரமும் செய்தேன். ஒரு குருடனின் பலவீனங்களோடும், ஒரு கதாசிரியனின் பலங்களோடும் நான் செயல்பட வேண்டியிருக்கிறது. பொறுமையும், நிதானமும் மிகுந்த ஒரு நர்ஸ் ஒரு நோயாளியைக்கவனித்துக்கொள்வதைவிட அதிகமான அக்கறையுடன் என்னைக் கவனித்துகொள்ள ஓர் ஆள் நம்பிக்கையாக வேண்டியிருக்கிறது. அப்படிக் கவனித்துக்கொள்கிறமனப்பக்குவமும் பொறுமையும் இல்லாதவர்களைப் பணத்தாலும் சம்பளத்தாலும் மட்டுமே விலைக்கு வாங்கிவிட முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. ‘இதையும் ஒருவேலை’ என்று ஏற்றுக்கொண்டு வருகிறவர்களிடம் நான் என்னை முழுவதுமாக ஒப்படைக்க முடிவதில்லை அம்மா! இதை வெறும் உதவியாக ஏற்றுக்கொண்டு என்மேல் உள்ள மதிப்பின் காரணமாக இலவச சேவை செய்ய வருகிறவர்களை நானே அதிக வேலை வாங்கத் தயங்கவேண்டியிருக்கிறது. என் எழுத்துக்களைப் படித்து மயங்கி ஒரு கல்லூரி மாணவி, கைமாறு எதையும் கருதாமல் எனக்குக் காரியதரிசியாகப் பணியாற்ற விரும்புவதாய்ச் சொல்லிக்கொண்டு நேற்று வந்தாள். இப்போது நீ உட்கார்ந்து கொண்

டிருக்கிறாயே, இதே நாற்காலியில்தான் காகிதத்தையும் பேனாவையும் எடுத்துவைத்துக்கொண்டு பகல் முழுவதும் காத்திருந்தாள். சில வரிகளுக்கு மேல் என் கற்பனை ஓடவில்லை. சிந்தனை ஊற்றுக்கண் கூடச் சில நேரங்களில் மூடிக்கொண்டு சதி செய்து விடுகிறது "'எப்போது 'மூட்' வந்தாலும் உடனே எங்கள் வீட்டுக்கு ஃபோன் பண்ணுங்கள். உடனே நான் மறுபடி வந்து உங்களைக் கூறச் சொல்லி எழுதுகிறேன்'' என்று சொல்லிவிட்டுஅந்தப்பெண்வீட்டுக்குப்போய்விட்டாள். அலுவலகம் முடிந்து என் வீட்டுக்குப் போய் நள்ளிரவுக்கு மேல், தூக்கம் வராமல் மாடி வராந்தாவில் உலவிக்கொண்டிருந்த போது காற்றில் மரங்கள் ஆடும் இதமான ஓசையையும், பன்னீர்பூக்களின் ஈரநறுமணத்தையும் உணர்ந்து, என் சிந்தனைக் கண் திறந்து, ஏதோ சொல்லவேண்டும் என்று தோன்றினால், அந்த நடு நிசி வேளையில் நான் இந்தப் பெண்ணுக்கு ஃபோன் செய்து வரச்செல்லுவது நன்றாயிருக்குமா? புகழ் பெற்ற நான், தனிமையில் எத்தனை ஆதரவற்றவனாய் இருக்கிறேன் பார்த்தாயா பெண்ணே?

சுகுணா: எந்த விதத்திலாவது உங்களுக்கு உதவி செய்து பெருமைப்பட முடியுமானால் அதை நான் பெற்ற பேறாகக் கருதுவேன். ஐயா...நான் தாய்தந்தையற்றவள். என் மாமாவோடு இருக்கிறேன். மாமா நல்லவர். மாமி மிகவும் பொல்லாதவள். உங்களுடனேயே இருந்து "'திராட்சைத் தோட்டம்'' கதையை நீங்கள் சொல்லச் சொல்லக் கேட்டு எழுதிக்கொண்டுவரவே நான் விரும்புகிறேன்.

குமாரகவி: உன்னுடைய விருப்பத்தை வரவேற்கிறேன் அம்மா! ஆனால் இந்த முறை நான் தேர்ந்தெடுக்கப் போகிற துணை, மிகவும் உறுதியானதாகவும், இறுதி வரை என்னை ஆதரவற்றவனாய் விட்டுவிடாமல்

தொடர்ந்து உடன்வரக்கூடியதாகவும் இருக்கவேண்டும் என்று விரும்புகிறேன். நீ பாரதியாருடைய கவிதைகளைப் படித்திருக்கிருய் அல்லவா? தோத்திரப் பாடல்களில் 'கோவிந்தன் பாட்டு' என்று ஒரு தலைப்பு இருக்கும். அந்தப் பாடலின் கடைசிப் பகுதியிலே...

''என் கண்ணை மறந்துன் இரு கண்களையே என்னகத்தில் இசைத்துக்கொண்டு...''

சுகுணு: (பாடலை முழுவதுமாகப் பாடி முடிக்கிருள்.)
''நின் கண்ணுற் புவி எல்லாம் நீ எனவே நான் கண்டு நிறைவு கொண்டு...''

குமாரகவி: ஆமாம் பெண்ணே! என்னுடைய தேவையை மிகமிகப் பொருத்தமான சொற்களால் உனக்கு விளக்க வேண்டுமாஞல் இந்தப் பாரதி பாடலை அப்படியே சொல்லிவிட்டு விடலாம். கண்ணில்லாத நான், இந்த உலகத்தைப் பார்ப்பதற்கு, நம்பிக்கையான கண்கள் இரண்டு எனக்கு வேண்டும். பணமும், புகழும், தரமான இந்த இலக்கிய இதழும்-இதன் முழு உரிமையும் இதை ஆள்கிற ஆசிரியர் பதவியும் இல்லாவிட்டால் புறக்கண்களின்றி-மனக்கண்ணுல் மட்டும் உலகத்தில் வாழ்ந்து பார்க்கலாமே என்கிற தைரியம் கூட எனக்கே வந்திருக்காது அம்மா!

சுகுணு: நீங்கள் இந்த உலகத்தைப் பார்க்கும் கண்களாக நான் இருந்து உங்களுக்குத் துணைநிற்கலாம் என்கிற உறுதி எனக்கு இருக்கிறது ஐயா!

குமாரகவி: இந்த விஞடிவரை... என்னுடைய மனக்கண்ணுல் நான் உன்னைப் புரிந்துகொண்டமட்டும்... உன்னிடமுள்ள இரண்டு தன்மைகள் எனக்கு மிகவும் பிடித்திருக்கின்றன பெண்ணே. இந்த அறைக்குள் இன்று நீ வந்தபோது தரை அதிராமல் மலர்கள் உதிர்வது போல் ஓசையின்றி நடந்து வந்தாய்! உனக்கும் முன்ஞல்

நீ உன் கூந்தலில் சூடிக்கொண்டு வந்திருக்கும் மல்லி கைப் பூவின் மணமும், கைகளில் ஒலிக்கும் வளைகளின் ஒலியும் என்னை நாடி ஓடிவந்த காரணத்தால்தான் ஒரு பெண் வந்திருக்கிருள் என்பதையே நான் உய்த்து உணர்ந்து கொண்டேன். வாய் அதிராமல் மெல்லிய குரலில் சங்கீதத்தைப்போல் நிரவிப் பேசுகிருய் நீ. தரையதிராமல் நடப்பதும், வாயதிராமல் பேசுவதும் என்னைக் கவருகிற உயர்ந்த குணங்கள். இவற்றைத் தவிர உன்னிடமுள்ள வேறு திறமைகளை இனி நீதான் எனக்குச் சொல்ல வேண்டும்.

சுகுணு: நன்றி ஐயா! எனக்கு ஆங்கிலமும் தமிழும் நன்ருக எழுதப்படிக்கத் தெரியும். கையெழுத்து ஓரளவு அச்சுக் குண்டாக இருக்கும். தட்டெழுத்தில் நன்கு தேர்ச்சி பெற்றிருக்கிறேன். வீணை வாசிப்பேன். கொஞ்சநாள் அடுத்த தெரு நட்டுவனுருடைய நாட்டியப் பள்ளியில் நாட்டிய வகுப்புக்கும் போய் வந்திருக்கிறேன். கார் ஓட்டவும் பழக்கம் உண்டு. சும்மா, ஒரு தோழியின் காரில் 'எல்' அட்டை மாட்டி வேடிக்கையாக அவள் பழகியபோது நானும் பழகினேன். எனக்கு நன்ருகக் கார் ஓட்ட வந்துவிட்டது. ஆனுல் அவளுக்கு வரவில்லை. அந்த நேரத்திலேயே 'டிரைவிங் லைசன்ஸ்' வாங்கி விட்டேன் நான். என்னுடைய இவ்வளவு திறமைகளும் உங்களுக்குக் கொஞ்சமாவது பயன்பட முடியுமானுல் அதற்கு நான் மிகவும் பேறு பெற்றவளாவேன் ஐயா!

குமாரகவி: அதிர்ஷ்டம், பேறு என்றெல்லாம் சொல்லாதே அம்மா! இவற்றை நான் ஒருபோதும் நம்புவதேயில்லை. நமக்கு நல்லபடியாக முடிகிறவற்றையெல்லாம் அதிர்ஷ் டம் என்றும், வேறுவிதமாக முடிகிறவற்றையெல்லாம் துர் அதிர்ஷ்டம் என்றும் வகுத்து உலக வழக்கில் மிகவும் குழந்தைத்தனமானதொரு தத்துவத்தை உண்டாக்கிக் கொண்டிருக்கிறேம். அது போகட்டும்? நீ மணிமாலை

இதழ்களை ஆரம்பத்திலிருந்து விடாமல் படித்திருக்கிறாயா பெண்ணே...?

சுகுணா: பெரும்பாலும்... மணிமாலை இதழ்கள் எல்லாவற்றையுமே நான் படித்திருக்கிறேன் ஐயா! மணிமாலை இதழ்களைத் தவிர, உங்களுடைய கதைகளையும், நாவல்களையும், கவிதைகளையும் நூல்வடிவிலும் பலமுறை படித்திருக்கிறேன். 'பாற்கடல்' என்ற நாவலில் 'பேசிய பேச்சுக்குத்தான் சொற்கள் சான்றாக நிற்கும். பேசாத பேச்சுக்கு மனம்தான் சாட்சி. மனம் மட்டுமே சாட்சியாக நிற்கிற பல நினைவுகளுக்கு, நிதானமும் பொறுமையும் இல்லாத இந்த அவசர உலகத்தில் நிரூபணமே கிடையாது போல் இருக்கிறது' என்று தன் காதலை நிரூபிப்பதற்குச் சொற்களையும் பேச்சையும் சாட்சியாக்க முடியாமல் தவிக்கும் ஓர் ஊமைப் பெண் எண்ணுவதாக எழுதியிருக்கிறீர்கள். அந்த இடத்தை மட்டும் நான் ஆயிரம் தடவைகளுக்குக் குறையாமல் படித்திருப்பேன். மகாகவி தாகூரின் 'சுபாஷிணி'யை விட உங்களுடைய பாற்கடலில் வருகிற ஊமைப்பெண் அருமையான பாத்திரப்படைப்பு. தன்னுடைய நினைவுக்குச் சொற்களைச் சாட்சியாக அழைத்துப் பேச முடியாத அவள் தவிப்பை நீங்கள் மிக அழகாகச் சித்தரிக்கிறீர்கள் ஐயா!

குமாரகவி: அதிகம் புகழாதே பெண்ணே! புகழ் என்னைச் சோர்ந்து போகும்படி செய்து விடுகிறது. ஒரு நிலைமைக்கு மேல் பழிக்கு அஞ்சுவது போல் புகழுக்கும் கூட அஞ்சி விலகி ஒதுங்க வேண்டியிருக்கிறது அம்மா! (சிரிக்கிறார்)

[தொலைபேசியின் மணி ஒலிக்கிறது. குமாரகவி தட்டுத் தடுமாறி எழுந்துபோய்ப் பேச முயல்கிறார். அவரை அமர்த்திவிட்டு சுகுணாவே எழுந்துபோய் அதை எடுக்கிறாள்]

தொலைபேசிக்குரல்: நான்தான் கவிஞர்......பேசுகிறேன். குமாரகவியைச் சந்திக்க வேண்டும்... எப்போது அவருக்கு நேரம் சௌகரியமாக இருக்கும்?

சுகுணா: (தொலைபேசி வாயை ஒரு கையால் மூடியவாறு) ஐயா...அவரை எப்போது வரச்சொல்லலாம்...

குமாரகவி: (சிரித்து) பரவாயில்லையே... நியமனம் செய்வதற்கு முன்பே நீ வேலை பார்க்கத் தொடங்கிவிட்டாற் போலிருக்கிறது... அவரை... நாளை மாலை மூன்று மணி அளவில் வரமுடியுமா என்று கேள்... வரட்டும்...
[செய்தியைப் போனில் சொல்லிவிட்டு மீண்டும் இருக்கைக்கு வருகிறாள் சுகுணா]

சுகுணா: இப்போது சொல்லுங்கள் ஐயா! உடனடியாக ஏதாவது அவசரமான வேலைகள்...

குமாரகவி: ஆமாம் பெண்ணே! அடுத்தவார மணிமாலைக்குத் தலையங்கம் எழுதியாக வேண்டும். ஆங்கிலச் செய்தி ஏடுகளை எடு...காமன்வெல்த் நாடுகளின் தலைவர்கள் சந்தித்துப் பேசிய செய்தியைச் சற்று விரிவாகப்படி... அப்புறம் நான் கூறுகிறபடி குறிப்பெடுத்துக்கொள்...

[சுகுணா பரபரவென்று அவர் இட்ட பணிகளைச் செய்யத்தொடங்குகிறாள். தானாகவே, அன்றைய தபால்களை எடுத்துப் படிக்கிறாள். வந்திருந்த கதைகள் சிலவற்றையும் பொறுமையாகப் படித்துக்காட்டி ஆசிரியரின் கருத்தைக் கேட்டறிகிறாள்.]

குமாரகவி: போதும் அம்மா! ஒரே மாதிரியான இந்த வேலைகள் அலுப்பேற்படுத்துகின்றன. உனக்குத்தான் வீணை வாசிக்கத் தெரியும் என்றாயே! ஏதாவது வாசிக்கலாமே. இந்த அறையிலேயே, ஒரு வீணை இருக்கும். நான்கூட எப்போதாவது எடுத்து அதை வாசிப்ப

துண்டு. கைப்பழக்கத்தில் கூடியவரை அபசுவரமில்லாமல் ஏதோ வாசிக்க வரும். உனக்குப் பிடித்ததை நீ வாசியேன்!

(எழுந்திருந்து வீணையை எடுத்துத் தர முயல்கிறார்)

சுகுணா: நீங்கள் அப்படியே அமர்ந்திருங்கள் ஐயா! வீணை எதிரேதான் இருக்கிறது. நானே எடுத்து வாசிக்கிறேன்...

[சற்றுநேரம் வீணையை எடுத்து வாசிக்கிறாள். அவளுக்குப் பிடித்த தேவகாந்தாரி ராக 'க்ஷீரசாகர' என்கிற பாடல் காற்றில் மிதந்து அறையை நிறைக்கிறது.]

குமாரகவி: அற்புதம், பெண்ணே! (உற்சாகத்தோடு கைகளைத் தட்டி ஆரவாரம் செய்கிறார்) ஏதேது கச்சேரியே செய்து விடுவாய் போலிருக்கிறதே! இவ்வளவு தெரிந்துவைத்துக்கொண்டு 'கொஞ்சம் வீணையும் தெரியும்' என்றாயே, பார்க்கலாம்!

சுகுணா: மன்னிக்கவேண்டும் ஐயா! உங்கள் முன்னால் ஒன்றும் தெரியாதவளாகிப் பிரமித்துத் தயங்கி நிற்பதில்தான் நான் மகிழ்ச்சியடைய முடியும்.

குமாரகவி: இன்னும் ஒரு பாட்டை நீ வாசிக்கலாமே! தேனுகாவில் எப்போதுமே தோடிராகத்தின் பல்லாயிரம் நயங்களில் மிக அபூர்வமானதொரு நயத்தின் சாயை படர்ந்திருக்கும். அதை நான் மிகவும் இரசிப்பேன்...

(சுகுணா மீண்டும் ஒரு பாடலை தேனுகா ராகத்தில் வீணையில் வாசிக்கிறாள்)

திரை

## காட்சி-2

[மணிமாலை அலுவலகத்தில் முறைப்படி சுகுணா வேலைக்கு அமர்ந்து சில மாதங்களாகின்றன. ஒருநாள்

குமாரகவியுடன் தனிமையில் அமர்ந்து அவரது காரைச் செலுத்திக்கொண்டு செல்கிறாள்.]

சுகுணா: விளையாட்டுப்போல் நான்கைந்து மாதங்களாகி விட்டன ஐயா! கொடுமைக்கார மாமியின் பிடியில் சிக்கி உழன்ற எனக்கும் ஒரு விடிவு காலம் பிறந்தது.

குமாரகவி: ஆமாம் பெண்ணே! அந்தக் கதையையெல் லாம்தான் என்னிடம் விரிவாகவே சொல்லியிருக் கிறாயே! வாலைப் பருவத்திலேயே தாய் தந்தையரை இழந்து, மாமன் வீட்டில் வளர்ந்து கருணையையும் அன்பையும் அறியாத உன் மாமியின் கொடுமைகளினால் பொறுமையையும் நிதானத்தையும் நீ கற்றுக்கொண் டது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று? அமைதியே உருவான உன் மாமனின் அன்பிலே மட்டும் நம்பிக்கை வைத்துப் படிப்பு முதல் உலகம்வரை ஓரளவு கற்றுத் தேர்ந்தாய். உன்னுடைய துறுதுறுப்பான கலை ஆர்வத்தை ஒடுக்கி அடக்கிவிட உன் மாமியால் கூட முடியவில்லை. அந்த வீட்டுக்குப் பாரமாக இருக்கக் கூடாது என்று உத்தியோகமும் உறவும் தேடி உலகத்தை எதிர் பார்த்துக்கொண்டிருந்த உனக்கு இந்தக் குமாரகவியிடம் புகலிடம் கிடைத்தது. இரண்டு ஆதரவற்றவர்கள் ஒன்று சேர்ந்தபோது தனித்தனியே நம் இருவருக்கும் துணை கிடைத்துவிட்டது...இல்லையா?

சுகுணா: வெறும் துணை என்று அதிக நாட்கள் சொல் லிக்கொண்டிருக்க முடியாது போலிருக்கிறது ஐயா!

குமாரகவி: என்ன சொல்கிறாய் நீ. பெண்ணே!

சுகுணா: ஆமாம் என் தெய்வமே! இனி உங்களை நான் இப்படி அழைப்பதுதான் பொருத்தமுடையதாக இருக்கும் போல்தோன்றுகிறது. ஏதாவது ஓர் உறவைக்கற்பித்துக் கொள்ளாமல், உத்தியோகமாகவோ உபசாரமாகவோ மட்டும் ஒரு பெண் ஓர் ஆடவனை நெருங்கி வாழ்வதைக் கவுரவமாகவோ நாகரிகமாகவோ அங்கீகரித்துக்கொள்

வதற்கு, அத்தனை தாராள மனமுள்ளவர்கள் இந்த தேசத்திலே இன்றுவரை எங்கே ஏற்பட்டிருக்கிறார்கள்? வம்பு பேசுகிற இந்த உலகத்தின் கண்களில் எதுதான் நியாயமாகப் பட்டிருக்கிறது?

குமாரகவி: அவசரப்பட்டு எதையாவது பேசாதே பெண்ணே! என்ன நடந்தது? எது உன் மனதை இப்படிச் சலனப் படுத்தியது? சொல்!

சுகுணா: எவ்வளவோ நடக்கிறது. இலைமறை காயாக யார் யாரெல்லாமோ எதையெதையோ பேசுகிறார்கள். 'குமாரகவிஞர் ரொம்பப் பசையுள்ள ஆளோ இல்லையோ? அதனால்தான் இந்தக் குட்டி அந்தக் குருடனை மயக்கி வளைக்கப்பார்க்கிறார்கள்' என்று என் காதுபடவே பேசுகிறார்கள்.

(காரை ஓரமாகச் சற்று நிறுத்துகிறாள். விம்முகிறாள்.) தெய்வமே! உடனே என்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு விடுங்கள். அல்லது நம்பிக்கை வாய்ந்த வேறொரு காரியதரிசியைத் தேடிக்கொண்டு என்னை வெளியே அனுப்பிவிடுங்கள். என்றால் தானே உங்களை இப்படிக் கன்னாபின்னாவென்று பேசுகிறார்கள்...?

குமாரகவி: (சற்று நீண்ட மௌனம்) ஆமாம் பெண்ணே? உன்னுடைய இடத்தை வேறு ஒருவரால் சுலபத்தில் நிரப்பிவிட முடியாது. உன்னை இழப்பதற்குப் பயந்து, உனக்காக என்னை நான் இழந்து விடலாமென்றுதான் தோன்றுகிறது. உன்னை மணப்பதற்குச் சம்மதிக்கிறேன். ஆனாலும் இது மிகவும் பெரியதான ஒரு சுயநலம்தான். (சிரிக்கிறார்)

## காட்சி-3

(சுகுணா மாடியில் நின்றவாறு வானைப்பார்த்தபடி இருக்கிறாள். வானத்தைக் கீறிக்கொண்டு 'சர்ர்' என்று ஒரு விண்மீன்

தரைவீழ்கிறது. அதுவரையில் மரக்கூட்டத்தையும் சலனமற்ற ஆகாயத்தையும் நிதானமாக விரும்பிப் பார்த்துக் கொண்டிருந்த சுகுணா 'நட்சத்திரம்' விழுந்ததைக் காணப்பொறுக்காமல் வாசலைவிட்டு உள்ளே திரும்பி நடக்கிறாள்...]

சுகுணா: (தனக்குள்) எத்தனை மூடநம்பிக்கைகள்... இந்த ஏழை நாட்டிலே! நட்சத்திரம் விழுவதைப் பார்த்தால் கெடுதலாம்...அதற்குப் பரிகாரமாக, நட்சத்திரத்தைப் பார்த்த சுவட்டோடு ஏதாவது ஒரு பச்சைமரக்கூட்டத்தையும் பார்த்துவிட வேண்டுமாம். பச்சைமரக்கூட்டமே இல்லாத இடத்தில் இப்படி நட்சத்திரம் விழுவதைக் கண்டாலோ, அல்லது பச்சைமரக் கூட்டம், விழுகிறநட்சத்திரம் இரண்டையும் ஒன்றாகச் சேர்த்தே காண நேர்ந்தாலோ என்ன செய்வதாம்?
(உள்ளே வருகிறாள். மின் விசிறி விரைந்து ஓடுகிற வழக்கமான ஓசை கேட்கிறது. அமைதியான இரவு நேரம்...சாய்வு நாற்காலியில் அமைதியாய் உறங்கிக் கொண்டிருக்கிறார் குமாரகவி...கழற்றிவைத்த கறுப்புக் கண்ணாடியை மேசைமேல் எடுத்து வைக்கிறாள் சுகுணா.)

சுகுணா: (மீண்டும் தன்னுரையாக) ம்... இந்த அபூர்வமான மனிதருக்குக் கண்களும் இருந்திருக்குமானால் எவ்வளவு நன்றாயிருக்கும்? இந்த உலகத்தில் இரண்டு கண்களும் இருக்கிற பார்வையுள்ள மனிதர்களான எத்தனையோ பல்லாயிரம் பேர்களுக்கு இல்லாதபுகழும் திறமையும் இவருக்கு இருக்கின்றன. கண்பார்வையும் இருக்குமானால் இவரும் இந்த உலகமும் நானும் எவ்வளவு கொடுத்துவைத்தவர்களாக இருப்போம்?)

(காட்சி மாற்றம்)

(ஓர் நாள்...சுகுணாவும் குமாரகவியும் தனித்திருந்த நேரம்)

குமாரகவி: நான் பிறவிக் குருடனில்லை யம்மா, கல்லூரிப் படிப்பு முடிகிறவரை வசீகரமான கண்களும் வனப்பு மிகுந்த பார்வையுமாகத்தான் இந்த உலகத்தில் நான் சுற்றி வந்திருக்கிறேன். அந்தப் பருவத்தில், ஒரு மின்னல் என் பார்வையைப் பறித்தது...

சுகுணா: ஓரளவு தெரியும் ஐயா...நண்பர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன்...

குமாரகவி: ஒன்றை மட்டும் உறுதியாகச் சொல்வேன் பெண்ணே, என்னைப்போல் ஒரு குருடனுக்கு நீ மனைவியாக இருப்பதைவிட வாழ்க்கைத் துணையாக இருப்பதுதான் பொருந்தும். இனி நான் உலகத்தைக் காண்பதற்கும், உலகம் தன்னை எனக்குக் காட்டுவதற்கும், நீயே கண்களாவாய்!

சுகுணா: மிகவும் பேறு பெற்றவள் ஐயா நான்...அப்படியேதான் இதுவரை இருந்திருக்கிறேன். இனியும் இருப்பேன்.

குமாரகவி: பொறு பெண்ணே! இரண்டு பேருக்குமாகச் சேர்த்துப் பார்க்கிற கண்களுக்குப் பொறுப்பும், சிரமமும் அதிகம். என்னுடைய பணத்துக்கும் புகழுக்கும் ஆசைப்பட்டு என்னைக் கணவனாக ஒப்புக்கொண்டு கழுத்தை நீட்டுவதற்கு எத்தனையோ ஏழைப் பெண்கள் துணிந்து முன்வரலாம். நானோ ஒரு மனைவியை மட்டும் தேடவில்லை என்பதை நீ புரிந்து கொள்ள வேண்டும். என்னை ஒப்படைக்க நம்பிக்கை வாய்ந்த ஒரு துணைவியைத் தேடுகிறேன். துணையில்லாமல் இனியும் நீண்ட தூரம் நடந்து விட முடியும் என்ற நம்பிக்கை இந்தக் குருடனுக்கு இல்லை. வாழ்க்கையில் இன்னும் போக வேண்டிய தொலைவும், கடக்க வேண்டிய மேடு பள்ளங்களும் நிறையவே இருக்கும் போலத் தோன்றுகிறது.

சுகுணு: தங்கள் நம்பிக்கை பொய்க்காமல் அந்தப் பயணத்தில் வழிகாட்டி உடன்வர முடியும் என்கிற நம்பிக்கை எனக்கும் இருக்கிறது ஐயா!

## காட்சி-4

**[இடம்: குருகுலைப் பள்ளத்தாக்கு திராட்சைத் தோட்டங்களைச் சுற்றிப் பார்க்க குமாரகவியும் சுகுணுவும் அங்கு வந்திருக்கிறார்கள்.]**

சுகுணு: நேற்றிரவு ஒரு காட்சி...

குமாரகவி: என்ன, சொல்லேன் சுகுணு!

சுகுணு: வழக்கமான ஒன்றுதான்...நீங்கள் உறங்கிப் போய் விட்டீர்கள். அப்புறம் நான் பால்கனிக்குப் போய்... அது ஒரு சுகமான அனுபவம். தெய்வமே! யாரோ பெருமூச்சு விடுகின்ற மாதிரிச் சீறுகின்ற வேப்ப மரக் காற்று ஓர் புறம், தன்னியல்பாக வானத்திலிருந்து உதிர்ந்து தரையில் வீழ்கிற நட்சத்திரம்...இந்த நட்சத்திரத்தின் சாவையும், தகனத்தையும் பார்த்து இரசிப்பதுகூட மனத்துக்கு மிகவும் இதமாக இருக்கிறது. நினைத்துக் கொண்டேன். எவ்வளவோ நட்சத்திரங்கள் உதிர்ந்த பின்னரும் இழப்பேதும் இல்லாத இந்த வானம் இன்னும் அழகாய்த் தானே இருக்கிறது? இப்படி இடைவிடாமல், நாள் தவறாமல் நட்சத்திரங்கள் உதிர்ந்து கொண்டேயிருந்தால் ஒரு நாள் இந்த வானம் மூளியாகி...அப்பப்பா! இப்படி நினைப்பதுகூட அச்சமூட்டுவதாக இருக்கிறதே!

குமாரகவி: சுகுணு! குருகுமலைப் பள்ளத்தாக்கிற்கு வந்தது எதற்காக என்பதையே மறந்து விட்டு நீ வேறு ஏதோ சிந்தனையில் மூழ்கி விட்டாய்...இருக்கட்டும். இந்தக் காட்சியும் என்னுடைய மனத்துக்கு மகிழ்ச்சியைத் தான் தருகிறது சுகுணு...

சுகுணு: தெய்வமே! என்னவோ ஓர் உணர்ச்சிப் படபடப்பு...எதையோ நினைத்துக் கொண்டு பேசி வந்ததை மறந்துவிட்டேன். திராட்சைத் தோட்டம் தொடர் கதை அத்தியாயங்களுக்காக, இந்தப் பள்ளத்தாக்கிலுள்ள தோட்டங்களைச் சுற்றிப் பார்க்க அல்லவா வந்தோம்?

குமாரகவி: நினைவு வந்து விட்டதா? காரை எடுத்துக் கொண்டு போக வேண்டியதுதானே? உன்னுடைய வர்ணனை...உண்மையான காட்சியை விடவும் உயர்தரமானதாகத்தானே இருக்கும்! புறப்படுவோமே!

(சுகுணு, காரை எடுத்துக் கொண்டு வருகிறுள். கைத்தாங்கலாக குமாரகவியையும் முன்புற இருக்கைக்கு ஏற்றி அமர வைக்கிறுள். கார் புறப்படுகிறது.)

சுகுணு: இன்று நீங்கள் மிகவும் உற்சாகமாக இருக்கிறீர்கள் தெய்வமே! நம்முடைய திருமணத்துக்குப் பின்னர் அதிக அளவு உற்சாகத்தை மீண்டும் உங்களிடம் இப்போதுதான் பார்க்கிறேன்.

குமாரகவி: அப்படியா! நீ சொன்னுல் சரிதான். இப்போது எங்கே வந்து கொண்டிருக்கிறோம்...நீ காட்சி வருணனையைத் தொடங்கலாமே!

சுகுணு: இதோ தொடங்கிவிட்டேன்...கன்னங்கரேலென்று கொத்துக் கொத்தாகக் கறுப்புத் திராட்சைக் குலைகள் தொங்கிக் கொண்டிருக்கின்றன. மிக நீண்ட வெள்ளைத் திராட்சைக் குலைகளும் ஆங்காங்கே தெரிகின்றன. நடு நடுவே 'ஸில்வர் ஓக்ஸ்' மரங்களைக் கட்டை கட்டையாகக் கத்தரித்து விட்டு—அவற்றைத் தூண்களாகக் கொண்டு மூங்கில் பிளாச்சுக்களால் பந்தல் வேய்ந்திருக்கிறுர்கள். கண்ணுக்கு எட்டிய தூரம் வரை இந்தப் பந்தல்களில் படர்ந்திருக்கிற பச்சைக் கொடிகளின் அழகும் இலைகளின் அழகும் அவற்றுக்கு மேலே,

மலைச்சரிவில் முழு வட்டமாக நிலாக் காய்கின்ற அழகும்...என்ன சிரிக்கிறீர்கள்? ஒரேயடியாகத் தகவல் தொகுப்பாக என் வருணனை மாறிவிட்டதா என்ன?

குமாரகவி: அதில்லை சுகுணா! நீ வருணிக்கிற இந்தத் திராட்சைத் தோட்டங்களை விடவும், சுவையும் இனிமையும் நிறைந்த வேறு இரண்டு திராட்சைக் கனிகளை எனக்குத் தெரியுமே! அவை மண்ணில் முளைக்காமல் மரத்தில் படராமல் கனிந்திருக்கும். சொல் அதிராமல் சங்கீதம்போல் இனிய குரலில் பேசும், அந்தத் திராட்சைக் கனிகள் இரண்டும்தான், இப்போது இதோ இந்தத் திராட்சைத் தோட்டத்தை பற்றிப் பேசிக் கொண்டிருக்கின்றனவே!

(சிரிக்கிறார். சுகுணா காரைச் சற்று நிறுத்துகிறாள். புகழ்ச்சி கேட்ட நாணத்தில் தலை கவிழ்கிறாள்.)

## காட்சி - 5

[குருகுமலைப் பள்ளத்தாக்கில் ஒரு விருந்தினர் விடுதியின் அறை. சுகுணா எழுத எழுத, குமாரகவி சொல்லிக் கொண்டு வருகிறார்]

குமாரகவி: நேற்று என்ன எழுதி முடித்திருந்தாய்? சற்றுப் படி...

சுகுணா: (படிக்கிறாள்) தோட்டம் முழுவதும் இனிக்கிற பழங்களே பழுக்கும் திராட்சைவனமோ, அல்லது தோட்டம் முழுவதும் புளிக்கின்ற பழமே பழுக்கும் திராட்சைவனமோ எங்கும் கிடையாது. இன்பமும் துன்பமும் கலந்து வருகிற வாழ்க்கையைப் போல் ஒரே மண்ணில் வகுத்த வாழ்வில் இன்ப துன்பங்களைக் கலந்தே எதிர்பார்க்கும் மனிதர்களைப் போல் அந்தத் திராட்சைத் தோட்டமும் இருந்தது.

குமாரகவி: ஆமாம்...இந்த வரிகளைச் சொல்லி முடித்து விட்டு உறங்கப் போனோம் அல்லவா? உறக்கத்தில் நான் நேற்று ஒரு கனவுகூடக் கண்டேன்.

சுகுணா: கனவா? என்ன கனவு? யாரைப் பற்றிய கனவு அது?

குமாரகவி: அவசரப்படாதே! என் கண்களுக்கு முன்னால் பளபளக்கும் வண்ணக் கோளங்கள் கறுப்பிலும் வெளுப்பிலும், சிவப்பிலும், நீலத்திலும் என்று ஒரே திராட்சைக் கனிகளாக உருள்கின்றன. உற்றுப் பார்க்கிறேன். ஒவ்வொரு கனியிலும் உன் முகம் தெரிகிறது. என்னைப் பார்த்துச் சிரிக்கிறது. கனவில் தான் நான் குருடனாக இல்லையே...அதனால் உன் முகத்தை என்னால் மிகவும் நன்றாக, ஆசை தீரப் பார்க்க முடிந்தது...

(சுகுணாவின் கண்களில் நீர் பனிக்கிறது...கைவிரலால் ஒற்றி எடுத்துப் பெருமூச்சு விடுகிறாள்).

சுகுணா: அப்புறம்?

குமாரகவி: அப்புறம் என்ன? நான் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அத்தனை கனிகளும் உன் உதடுகளாக மாறி நகைக்கிற மாதிரித் தெரிந்தன. அப்புறம் நான் என்ன செய்தேன் தெரியுமா? அந்தக் கனிரசம் ததும்புகிற உதடுகளை... (சிரிக்கிறார்)

சுகுணா: போதும்...நீங்களும் உங்கள் கனவும். இன்று கதை அவ்வளவுதானா? மறுபடியும் தூங்குங்கள். இன்னும் ஏதாவது கனவு வரும்...

குமாரகவி: எழுதுவதுதான் இருக்கிறதே...எப்போது பார்த்தாலும் கடிதங்களுக்குப் பதில் எழுதுவது. நான் சொல்லச் சொல்லக் கேட்டுக் கதை எழுதி, அச்சுக்குத் தந்து, திருத்தி...என்று முடிவில்லாத பணி அது சுகுணா. இந்தக் காரியத் தளைகளிலிருந்து விடுபட்டு உலகியல்

வழிப்பட்ட வாழ்க்கையையும் சிறிது நினைவில் கொள்ள வேண்டும்...

சுகுணா: சரி...இன்னும் ஏதாவது சொல்ல மீதம் இருக்கிறதா, தெய்வமே...?

குமாரகவி: நிறையவே இருக்கிறது... மனம் விகாரப் படாமல் இப்போது நான் சொல்வதை அப்படியே கேட்டுக்கொள், சுகுணா! பணமும் சௌகரியங்களும், பேரும் புகழும் உள்ள ஒரு குருடனுக்கு வாழ்க்கைப் பட்டுவிட்ட கட்டாயத்திற்காக, சுகுணா மாடாய் உழைக்கிறாள். ஏதோ, வாழ்க்கைப்பட்டுவிட்டாளே ஒழிய, மகிழ்ச்சியோடு அவள் வாழவில்லை—என்று உன்னைப்பற்றித் தவறாக நினைத்து யாரும் அவசிய மற்றுக் கழிவிரக்கம் கொள்ளவோ, வம்பு பேசவோ சிறிதும் இடம் தராமல் நீ உன்னை நன்றாக ஒப்பனை செய்து கொள்ள வேண்டும்! மகிழ்ச்சியோடு துலங்க வேண்டும். இன்னும் சொல்லப்போனால், இவ்வளவு மகிழ்ச்சி உலகிலேயே வேறு எந்தப் பெண்ணுக்கும் இல்லை என்றுபோல் காண்பவர்களுக்கெல்லாம் தோன்றும்படி அத்தனை மகிழ்ச்சியோடும் பெருமிதத்தோடும் உன்னை நீ இந்த உலகுக்குக் காண்பித்துக் கொள்ள வேண்டும். உயர்ந்த வகை மல்லிகை மலர்கள் எந்நேரமும் உன் கூந்தலில் மணந்து கொண்டிருக்கவேண்டும்... பூப்போன்ற உன் முன் கைகளில் கலின் கலின் என்று வளைகள் குலுங்கிக் கொண்டிருக்க வேண்டும். நீ நடந்து வரும்போதெல்லாம் உன்னுடைய கால்விரல்களில் மெட்டி தாளமிடவேண்டும். அப்படித் தாளமிடுவது போல் ஓசை எழுப்பி நடந்து உனக்குப் பழக்கமில்லை என்பது தெரியும். என்றாலும் நான் செவியாரக் கேட்டு மகிழ்வதற்காக-அந்த மகிழ்ச்சியிலிருந்து என்னுடைய மனக்கண்ணில் பல்லாயிரம் கற்பனைகள் தெரிவதற்காக நீ உன் கால்களில் மெட்டியிட்டு நடந்துவரவேண்டும்...

சுகுணா: தெய்வமே! ஏன் இத்தனை ஆசைகள்...? எனக்குப் பயமாகக் கூட இருக்கிறதே...

குமாரகவி: இல்லை சுகுணா! நீ மிகமிக அழகாக இருப்பதாக, முதன் முதலாக நீ வீட்டுக்கு வந்த மறுதினமே, வேலைக்காரப் பெண்தான் என்னிடம் ஓடிவந்து சொன்னாள். தெரியுமோ? வாய் ஓயாமல் என்னிடம் வந்து சொல்லி எத்தனை பெருமைப்பட்டாள் தெரியுமோ? அவள் அப்படிச் சொல்லிடபோது உன்னுடைய அழகைப் பார்ப்பதற்காகவாவது ஒரு விநாடி என் கண்களுக்குப் பார்க்கும் ஆற்றலை அடைந்து பின் இழக்க வேண்டும் போல் ஏங்கித் தவித்தேன் நான். இந்த உலகத்தில் வேறு எதைப் பார்ப்பதற்காகவும் என்னுடைய சொந்தக் கண்கள் எனக்கு வேண்டும் என்று நான் இனிமேல் தவிக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் உன்னைப் பார்ப்பதற்கு மட்டும் என் சொந்தக் கண்கள் ஒரு விநாடி நேரம் எனக்கு வேண்டும் போல் இருக்கிறது. உன்னைத் தவிர மற்ற எல்லாவற்றையும் காண்பதற்கு உன் கண்களே போதும் எனக்கு...

சுகுணா: அளவுக்கு மீறிய புகழ்ச்சி கூட ஒரு வகைப் போதைதான் என்று சொல்வீர்களே தெய்வமே! அந்தப் போதையை எனக்கே ஏற்றலாமா? நீங்கள் என்மேல் ஏற்றுவது அதிகப் பொறுப்பா, போதையா?

குமாரகவி: எப்படியானால்தான் என்ன சுகுணா? இன்னும் சொல்ல வேண்டும் என்று நினைக்கிற எண்ணங்கள் நிரை நிரையாக வந்து கொண்டேயிருக்கின்றன. அந்த மெட்டியைப் பற்றிச் சொன்னேனே...

சுகுணா: ஆமாம்...கால் விரல்களில் மெட்டி தாளமிட வேண்டும்...தாங்கள் அதன் ஓசையைக் கேட்டு மகிழ்ந்து கற்பனை வானில் சிறகடிக்கவேண்டும் என்றீர்கள்.

குமாரகவி: அதுதான்! நாட்டுப்புறத்துப் பெண்கள், இந்த மெட்டி வளையங்களை மிஞ்சி என்று பெயர் சொல்லு வார்கள். உனக்குத் தெரியுமோ? அந்தக் கொச்சைப் பெயரில்கூட, நாம் நினைத்து நினைத்து நுகரும்படியான தொரு கவிநயம் இருக்கிறது. 'பாதாதி கேச பரியந்தம்' என்பார்கள். அந்த அடிமுதல் முடிவரை அல்லது முடி முதல் அடிவரை என்று ஒரு பெண்ணின் அழகுக்கு முழுஎல்லையைச் சொல்லும் வருணனையில் அழகு இறுதி யாகப் போய் முற்றித் தரையில் கால் ஊன்றிக்கொண்டு நிற்கிற இடமான விரல்களில், தனியாய் மிஞ்சி-மீதப் பட்டு நிற்கிற இந்த அணிகலனுக்கும் அதையே பெயராய் வைத்துக்கொண்டார்கள்.

சுகுணு: கேட்கவே அருமையாக இருக்கிறது, இந்த விளக் கம். தெய்வமே...! திராட்சைத் தோட்டம் நூல் வெளி யிட வேண்டும் என்று சொன்னீர்களே...

குமாரகவி: ஆமாம்! அதுதான் தொடர்கதை முடியப் போகிறதே...ஆம், நல்லதை நல்ல வேளையில் நினைவு படுத்தினுய். இதை இப்போதே எழுதிக்கொள்... முன்னுரை எழுதும் போது அதில் சேர்க்க வேண்டும்... அந்தகனுகிய நான் இந்த உலகத்தைப் பார்ப்பதற்கும் பார்த்துப் புரிந்து கொள்வதற்கும் நம்பிக்கை வாய்ந்த கண்களாக விளங்கி வரும் என் அருமை வாழ்க்கைத் துணைவி சுகுணுவுக்கு இந்தப் புத்தகத்தைக் காணிக்கை யாக்குகிறேன்...என்ன, எழுதினுயா? தயக்கமோ கூச் சமோ படாமல் எழுது...

சுகுணு: தயக்கம், கூச்சம் மட்டும் இல்லை தெய்வமே... இவையெல்லாம் எதற்கு? தங்களுக்குப் பணிவிடை புரிந்து தங்கள் வாழ்க்கைத் துணைவியாக உடன் வரு வதற்கு நான் அல்லவா பெருமைப்படவேண்டும்?... நானே பிடிவாதமாகவும், தீர்மானமாகவும் தங்களுக் குக் காணிக்கையாகியிருக்கும்போது, நூலை எனக்குக்

காணிக்கையாக்குவது கொஞ்சம் கூட நன்றாக இல்லை தெய்வமே!

குமாரகவி: மறுக்காமல் நான் சொல்வதை அப்படியே எழுதிக்கொள் சுகுணா! தயவு செய்து இதை மட்டும் மறுத்துப் பேசாதே. அன்று திராட்சைத் தோட்டம் தொடர்கதையைப் படியெடுத்து அச்சுக்குக் கொடுக்க யாருமே இல்லாமல் அது நின்று போயிருந்த நாளில், நீ என்னைத் தேடி வந்து எனக்குத் துணையாகி இரா விட்டால், இந்த நூலே இப்போது வெளிவர முடியாது அதனால் இதைக் காணிக்கையாக்குவதற்கு உன்னை விடவும் பொருத்தமானவர்கள் வேறு யாரும் இருக்க முடியாது பெண்ணே.

## காட்சி-6

[இடம்: மணிமாலை அலுவலகம். சுகுணா அன்று வந்த கடிதங்களைப் பிரித்து ஆசிரியருக்குப் படித்துக் காட்டிக் கொண்டிருக்கிறாள்]

சுகுணா: இதோ ஓர் இனிய செய்தி...அரசாங்கத்திலிருந்து வந்திருக்கிறது.

குமாரகவி: படியேன்....ஏதாவது சுற்றறிக்கையாக இருக்கும்...

சுகுணா: இல்லை, தெய்வமே! வெளிநாடுகளின் பண்பாட்டு உறவுகளைப் பரிமாறிக் கொள்ளும் பொருட்டு இந்திய அரசாங்கம் மூன்று பேர்களைத் தேர்வு செய்து ஐரோப்பிய நாடுகளுக்கு அனுப்புகிறதாம். அதில் தங்கள் பெயர் முதலாவதாக இருக்கிறது.

குமாரகவி: வேண்டாம் என்று எழுதி விடு அம்மா! உடல் நிலை காரணமாக எனக்கு வசதிப்படவில்லை என்று பக்குவமாக அவர்களுக்குத் தெரிவித்து விடு சுகுணா.

சுகுணு: இல்லை தெய்வமே! நாம் சென்று வருகிருேம், இப்போது தொடர்கதையும் முடிந்து ஓய்வாக இருக்கிறீர்கள். இப்போது போய்வந்தால் அடுத்த படைப்புக்களுக்கு உதவியாகவும் இருக்குமே...

குமாரகவி: அப்படியா சொல்கிருய்? உனக்கு விருப்பமாளுல் ஆகட்டும்...இசைவைத் தெரிவித்து விடு. ஐரோப்பிய நாடுகளேயும் சுற்றிப் பார்க்கத்தான் உன்னுடைய கண்கள் இருக்கின்றனவே. எனக்கு வேறென்ன வேண்டும்?

## காட்சி-7

[இடம்: இலண்டனில் ஒரு சிறப்புக் கூட்டம்...குமாரகவிக்குப் பாராட்டுக் கூறிப் பேச அழைக்கிருர்கள்]

வரவேற்பாளர்: எழுத்துக்களால் புதிய உலகம் ஒன்றைப் படைத்துக் காட்ட முடியும் என்று ஆசைப்படுவதுடன் நில்லாமல் செய்துகாட்டியும் வருகிறவர் நம்முடைய பேரன்பிற்குரிய தமிழ்நாட்டு எழுத்தாளர் திரு குமாரகவி அவர்கள். அவர்களுடைய வருகையால் நாம் பெருமையும் பூரிப்பும் அடைகிருேம்...நம்மிடையே உரையாற்றி மகிழ்விக்குமாறு திரு. குமாரகவி அவர்களே இந்த லண்டன் தமிழ் மன்றத்தின் சார்பில் கேட்டுக்கொள்கிறேன்.

[குமாரகவி பேச எழுகிருர்...கையொலி அந்த அரங்கை நிறைக்கிறது]

குமாரகவி: நண்பர்களே! அழைப்புக்கும் வரவேற்புக்கும் நன்றி வரவேற்புரையில் நான் படைக்க விரும்புகிற புதிய உலகத்தைப் பற்றிச் சொன்ஞர்கள். கண்களில்லாத நான் பழைய உலகத்தையே சரியாகப் பார்த்து முடிக்கவில்லை. பழைய உலகம், புதிய உலகம் எல்லாவற்றையும், இதோ என்னருகில் அமர்ந்திருக்கிருளே,

இவளுடைய நம்பிக்கைக்கு உரிய கண்களை இரவல் வாங்கிக்கொண்டுதான் நான் பார்க்கிறேன். எழுத்தில் என்னுடைய கருத்துக்களும், கற்பனைகளும் இவளுடைய பார்வையால தான் படைக்கப்படுகின்றன.

(கூட்டத்தில் மீண்டும் கையொலி)

குமாரகவி: (கையமர்த்திவிட்டுத் தொடர்கிறார்) நன்றி- வாழ்க்கைக்குச் செலவாகிற பொருளை ஈட்டுகிறவன் கணவன். வாழ்க்கையைத் தொடங்கி அதன் மேடு பள்ளங்கள் நிறைந்த நீண்டவழியில் ஆண்மைவாய்ந்த துணையாக இருந்து பெண்ணை உடனழைத்துச் செல்கிறவனும் கணவன்தான். அப்படியிருந்தும் நம்முடைய பழைமை வாய்ந்த மொழியில் மனைவிக்குத்தான் வாழ்க்கைத்துணை என்று பெயர் வைத்திருக்கிறார்கள்- கணவனுக்குப் பின்னால், இரண்டடி தயங்கி நின்று நாணி ஒசிந்து வருகிற பலவீனமான இந்தியப் பெண் ஒவ்வொருத்தியும், கணவன் முன் நின்று வழிகாட்ட, அவனுடைய துணையோடு நடத்து சென்றாலும் தானே துணையாயிருந்து அவனை அழைத்துப்போவதுபோல் வாழ்க்கைத் துணை என்ற கம்பீரமான பெயரைத் தனக்குரியதாகச் செய்து கொண்டிருக்கிறாள். என்னைப் பொறுத்தவரையிலோ நிஜமாகவே இவள்தான் என் வாழ்க்கைக்குத் துணையாய் இருக்கிறாள். வழித்துணையாயும் இருக்கிறாள்! ஒரு மனைவி கணவனிடமிருந்து அடையவேண்டிய மகிழ்ச்சியை எல்லாம் என்னிடமிருந்து எதிர்பார்ப்பதற்குப் பதில், கண்களால் உலகத்தைப் பார்க்க முடியாத நான் என்னிடம் சேர்த்து வைத்துக் கொண்டிருக்கும் அசௌகரியங்களையும், துன்பங்களையும் சிறிது சிறிதாக என்னிடமிருந்து கேட்டு வாங்கித் தான் அனுபவித்து என் சுமையைக் குறைக்கத் தொடங்கியிருக்கிறாள் இவள். கணவன் எந்த தருமத்தைச் செய்கிறானோ, அதற்குப் பக்கத் துணையாக நின்று உதவி புரிகிறவள் என்கிற காரணத்

தால் தான் மனைவிக்கு 'சகதர்மிணி' என்று ஒரு பெயர் வைத்திருக்கிறார்கள். இவள் என்னுடைய சகதர்மிணி நான் ஒரு பெரிய ஆசிரியர் என்பதற்காகவும், என்னுடைய கதைகளும், கவிதைகளும், நாவல்களும் பல்லாயிரக் கணக்கானவர்களைக் கவர்ந்து சிந்திக்க வைத்திருக்கின்றன என்பதற்காகவும் நான் பெருமைப் படுகிறேன். இதை விடவும் இவள் என்னுடைய மனைவியாக இருக்கிறாள் என்பதற்காகவே நான் அதிகமாகப் பெருமைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். பார்வையால் தான் கருத்துப் பிறக்கிறது. முதலில் கருத்து என்பது கண்களில்தான் பிறக்கிறது. பின்புதான் எண்ணத்தில் அது இணைகிறது. எனக்காக இவள் பார்க்கிறாள். இவள் பார்த்தவற்றை நான் நினைக்கிறேன். பார்வை இவளுடையது. அதன்மீதான கருத்துக்கள் என்னுடையவை. இவளை நான் வெறும் மனைவியாக நினைக்கவில்லை. என்னுடைய எழுத்திலும் எண்ணத்திலும் நிரம்பியிருக்கிற எல்லாவிதமான அழகுகளும் அருமைகளும் இவளுடைய இன்னருள் நிறைந்த கண்களிலிருந்துதான் தொடங்குகின்றன என்று எனக்கு ஒரு நம்பிக்கை உண்டு.

இப்படி முழுக்க முழுக்க என் மனைவி சுகுணாவைப் பற்றியே இங்கு பேச நேர்ந்து விட்டது. எனினும், என்னுடைய எல்லையற்ற வாஞ்சைக்கும், அன்புக்கும் பாசத்துக்கும் உரியவள் அல்லவா இவள்?

## காட்சி-8

நாடு திரும்பிய பின்

[ஒரு மாலை நேரம்...வீட்டில் வழக்கம் போல் மணி மாலை வேலைகள். சுகுணாவும் குமாரகவியும்]

குமாரகவி: இன்று பகல் உணவின்போது பால்பாயசம் பரிமாறினாயே...ஏன் என்றுகேட்டால், அப்புறம் சொல்

கிறேன் என்றாய். இப்போது சொல் சுகுணா...சொல்லி விட்டுக் கடிதங்களைப் பிரித்துப் பார்க்கலாம்.

சுகுணா: இன்று எனக்குப் பிறந்த நாள்...அதுதான் தெய்வமே...

குமாரகவி: இதை ஏன் முன்பே சொல்லவில்லை சுகுணா? உன்னுடைய பிறந்த நாளை நான் அல்லவா கொண்டாட வேண்டும்? எனக்கு வழிகாட்டித் துணையாயிருந்து அழைத்துச் செல்வதற்கு என்று பிறந்தவளாயிற்றே நீ...

சுகுணா: 'துன்ப நினைவுகளும் சோர்வும் பயமும் எல்லாம் அன்பில் அழியுமடி கிளியே!' என்று பாரதி பாடியிருக்கிற மாதிரி, தாங்கள் பேரன்புப் பெருங்கடலாகப் பெருகி என்னைச் சூழ்ந்திருக்கிறீர்கள் தெய்வமே! இந்தப் பெருமிதத்தில் என்னுடைய பிறந்த நாள் என்பது ஒன்றும் எனக்கு அவ்வளவு பெரிதாகப்படவில்லை ஐயனே...

குமாரகவி: தவறு பெண்ணே! முதலில் இதை எழுதி நீ எடுத்துக்கொள் சுகுணா. இது உன்னுடைய பிறந்த நாளுக்காக இன்று நான் தருகிற பரிசு...

(பாடலாகவே அவர் ஒரு கவிதையைச் சொல்ல, சுகுணா அதை எழுதிக் கொள்கிறாள்)

குமாரகவி: காணக் கண் கோடி வேண்டும்—அந்தக்
கண்கள் அத்தனையும்—நீ
நாணிச் சிரிக்கின்ற நகைமுகத்தை—அதில்
இரகசியமாய் வரும்—உன்
வீணைக் குரல்தரு சொல்லிசையே
விழும் மலர்போல்—இதழ்
பேணித் திறந்து பூப்பூவாய்—நீ
பேசும் அதிசயத்தை—நான்

காணக் கண்கோடி வேண்டும்
கண்டு முடிந்ததுமே—பின்
ஈனச் சிற்றுலகில் வேறேதும்
இருந்து காணமல்—கண்ணில்
ஆன தரிசனத்தின் அழகு குறையாதே
அத்தனை விழியும் அறவேண்டும்!

என்ன, எழுதிக் கொண்டாயா? பிறந்த நாள் வாழ்த்தாகவும் பரிசாகவும் இந்தக் கவிதையை ஏற்றுக் கொள்ள வேண்டும், தேவீ...! (சிரிக்கிறார்)

சுகுணா: (நாணத்துடன்) தெய்வமே! உங்களுடைய சொற்களால் நான் மிக அதிகமாக அலங்கரிக்கப்பட்டு விட்டேன். மகாகவிகளின் சொற்களால் யார் புகழப்படுகிறார்களோ அவர்களுடைய வசீகரம் அந்த வாக்கினுலேயே பெருகி வளர்கிறது என்பார்கள். என்னுடைய வசீகரமும் உங்களுடைய ஆசிர்வாதங்களை ஏற்று வளரட்டும் தெய்வமே!

குமாரகவி: வெறும் ஆசீர்வாதம் போதுமா பெண்ணே! உன்னை ஒவ்வொரு அசைவிலும் கவனித்துப் போற்ற வேண்டும் போல் ஆசையிருக்கிறது. ஆனால் அசைவுகளை உணர முடிகிறதே ஒழியப் பார்க்க முடியவில்லையே! நேரம் தவறாமல் உன்னைச் சாப்பிடச் சொல்கிறேன். அதைக் கூட நான் எங்கே கவனிக்க முடிகிறது. கடிகாரத்தைத் திரும்பிப் பார்த்து வேளா வேளைக்கு உன்னைச் சாப்பிடப் போ என்று உபசரிக்க மனம் விரும்புகிறது. ஆனால் நான் கடிகாரத்தைப் பார்க்க முடியுமோ? போன வெள்ளிக்கிழமை, பேச்சுப் போக்கில், நேரம் போனதே தெரியாமல் நான் உன்னிடம் வேலை வாங்கிக் கொண்டிருந்தேன். நினைவூட்ட மறந்து போனேன். நீயும் மறந்ததுபோல் எண்ணெய் நீராட்டத்தைத் தவற விட்டு விட்டாய். இப்படி இரண்டு முறை எண்ணெய் நீராட்டத்தைத்

தவறவிட்டு விட்டால் உன் கண்கள் என்ன ஆகும்? உடம்பு தான் என்ன ஆகும்? இரண்டு பேருக்குமாகச் சேர்த்துப் பார்த்துக் கொண்டிருக்கிற கண்களுக்கு சிரமமும் வலியும் அதிகமாயிற்றே...உனக்கும் இதில் கவனம் வேண்டும் அம்மா...

சுகுணு: சரி...உங்கள் விருப்பப்படியே இனி நடந்து கொள்கிறேன்...இப்போது எழுத வேண்டிய வேலைகள்...

குமாரகவி: இருக்கட்டும் அம்மா! நீ வீணைவாசித்து நீண்ட நாட்களாகி விட்டனவே...உன்னுடைய வாசிப்பைக் கேட்டால் என்னுடைய கற்பனை வளர்ந்து புதிதாக ஏதேனும் நல்ல கருத்துக்கள் தோன்றத்தான் செய்யும். அப்போது மீண்டும் எழுதினுல் போயிற்று. இப்போது வீணையை எடுத்து வாசியேன்...

[சுகுணு வீணையை எடுத்து வைத்துக் கொண்டு மீட்டுகிருள். 'தெலியலேது ராமா பக்தி மார்க்கமு' காற்றில் மிதந்து வருகிறது.

குமாரகவி: ஆஹா! எவ்வளவு நெகிழ்ச்சி! எத்தனை குழைவு! எதைக் கேட்டாலும் எனக்குப் பிடித்ததையே முன்னுல் வந்து தருகிருயே சுகுணு! உனக்குப் பிடித்தமானதென்று இந்த உலகில் ஒன்றுமே கிடையாதா என்ன?

சுகுணு: தெய்வமே! உங்களுக்குப் பிடித்தமானதெல்லாம் எனக்கும் பிடித்தமானவைதான்.

குமாரகவி: 'பக்தி நெறி எது என்று எனக்குத் தெரியவில்லையே இராமா?' என்ற இந்தப் பாடலைத்தான் முதன் முதலாக என்னைத் தேடி வந்த அன்றைக்கும் 'க்ஷிரசாகர'வுக்குப் பின் வாசித்தாய். நினைவிருக்கிறதா? நடைமுறையில் பார்த்தால் உன்னைத் தவிர வேறு யாருக்குமே பக்தி நெறி என்ன என்று தெரியாது

என்பதுபோல் அத்தனை அழகாகப் பக்தி செய்து வாழ்கிறாய் நீ! தன்னை மறந்து வாழும் உனக்கு, உன் தியாகத்தைப் பற்றி நானே நினைவூட்டக் கூடாது. குருடனாகிய என்னைப் பக்தி செய்ய அதிகமான பொறுமைவேண்டும். கணவனை, விலைமகள் வீட்டுக்குச் சுமந்து கொண்டு போன நளாயினி முதல் உன் வரை, இந்த தேசத்துப் பெண்கள் ஏதோ ஒரு பெருந்தன்மையைத்துன்பங்களின் நடுவே தங்களையே மறந்து விடுகிற பெருந்தன்மையைப் பக்கபலமாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அந்தப் பெருந்தன்மையை நான் மானசீகமாக வணங்குகிறேன் அம்மா! சில நேரங்களில் உன்னை என் மனைவியாக நினைத்துப் பார்க்கவும் எனக்கு மனம் கூசுகிறது. தாயைப் போல அன்பு செய்கிறாய்! குழந்தையைப் போல் பேதையாக இருக்கிறாய்! மனைவியைவிடப் பிரியமாக நடந்து கொள்கிறாய்! அதனால் உன்னை எந்த உறவில் அடக்குவதென்று எனக்கே தயக்கமாக இருக்கிறது. உயர்ந்த வகை மல்லிகை மலர்கள் உன் கூந்தலில் மணக்கவும், வளைகள் உன் கைகளில் நிறைந்து குலுங்கவும், நயமிக்க இசை நாடிகள் உன் இராகங்களில் துடிக்கவும் வேண்டும். நீ மகாலெட்சுமியாய் என்னைச் சூழ்ந்திருக்கிற வரையில் தான் நான் குருடன் என்பதை இந்த உலகில் என்னால் மறந்திருக்க முடியும் அம்மா.

சுகுணா: உங்களுடைய இந்தப் புகழையும், நல்ல அபிப்பிராயத்தையும் கடைசிவரை காப்பாற்றிக் கொள்ள வேண்டுமே, என்று பொறுப்பாகவும், அச்சமாகவும்கூட இருக்கிறது, தெய்வமே! அவநம்பிக்கையும் ஆத்திரமும் என் தெய்வத்துக்கு ஏற்படுவதே இல்லை. ஏதோ செல்வக் குழந்தையை வளர்த்துப் பெருமைப்படுகிற மாதிரி என்னிடம் பிரியம் வைத்திருக்கிறீர்கள். இதைக் கடைசி வரை காப்பாற்றிக் கொள்ளக் கூடிய அன்பின் வலிமை எனக்கு வேண்டும் தெய்வமே!

## காட்சி-9

[இடம்: மணிமாலை அலுவலகம். வழக்கம்போல் அன்று வந்த கடிதங்களைப் பிரித்துப் படித்துக் காட்டி வகைப்படுத்திக் கொண்டிருக்கிறாள் சுகுணா...எதிரே குமாரகவி கடிதங்களுக்கு உரிய பதில் குறிப்பைச் சொல்லிக் கொண்டு அமர்ந்திருக்கிறார்.]

சுகுணா: இன்று ஓர் அதிசயம். என் பெயருக்குக் கூட ஒரு கடிதம் வந்திருக்கிறது. மழை கொட்டத்தான் போகிறது...அதுவும் 'இரகசியம்' என்று குறிப்பு வேறு

குமாரகவி: அப்படியா? ஏதாவது மிக முக்கியமானதாக இருக்கும்...அது உன் சொந்த விஷயம்...மணிமாலைக் கடிதங்கள் இன்னும் ஏதாவது மீதமிருக்கிறதா பார்...

சுகுணா: வேறு கடிதங்களில்லை தெய்வமே! நீங்கள் ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். நான் அச்சுப் படிகளை ஒரு பார்வை பார்த்து விடுகிறேன்...

(தனக்கு வந்த கடிதத்தைப் பிரித்துப் பார்க்கிறாள். சுகுணாவின் உடம்பு பதறுகிறது. உச்சந்தலையில் யாரோ ஓங்கி அடிப்பதுபோல உணர்ந்து நடுங்குகிறாள். ஓய்வாக சாய்ந்திருக்கும் குமாரகவியை ஒருவிதமான அச்சத்தோடு பார்க்கிறாள்...)

(தனியிடத்தில் தனக்குத்தானே)

சுகுணா: நல்ல காலம்...உறங்கி விட்டார் போலிருக்கிறது. உனக்கு ஏதோ கடிதம் வந்தது என்று சொன்னாயே என்ன அது என்று கேட்டு விடுவாரோ? உடனேயே அவர் கேட்கவில்லையே? பாழாய்ப்போன இந்தக் கடிதத்தைப் படித்தது முதல் எனக்கு எதுவுமே ஓடவில்லையே...தெய்வமே! இது என்ன அபாண்டமான பழியெல்லாம் என்னைத் தேடி வந்து சேர்கிறதே...

(பரபரக்கிறாள்)

(மீண்டும் கடிதத்தை எடுத்து அந்த வரிகளைத் தனக்குள் படித்துப் பார்க்கிறாள்)

'சீவிச் சிங்காரித்துப் பூமுடிப்பதும், பட்டும் நகையுமாகப் பிறர் முன் நீ மினுக்குவதும் குருட்டுக் கணவனை ஏமாற்றி விட்டு...யாரிடமாவது திருட்டுக் காதல் புரிவதற்காகத்தானே...'

பாவிகளே! எப்படி மனம் வருகிறது இப்படியெல்லாம் எழுத...? (தொடர்கிறாள்) 'இனியும் நீ திருந்தவில்லையானால் உன் குட்டுத் தானே வெளியாகும். நியாய நேசனில் அச்சிடப்பட்டு ஊரெல்லாம் அம்பலமாகும்.' அடப் பாவி! அநியாயக்காரர்களுக்குத் துணைபோக நியாய நேசனு...யாரிடம் இதைப் பற்றிச் சொல்லி யழுவது? (அவள் கண்களில் மிரட்சியையும் மீறிக் கொண்டு நீர் கசிந்து திரையிடுகிறது)

## காட்சி-10

[மீண்டும் ஒரு பௌர்ணமி இரவு...சுகுணாவும் குமாரகவியும் சேர்ந்து அமர்ந்திருக்கின்றனர். நான்கைந்து மொட்டைக் கடிதங்கள்—வரிசையாக வந்ததில் சுகுணா குழம்பிப் போயிருக்கிறாள்.]

குமாரகவி: சுகுணா! என்ன சேதி? சில நாட்களாக நீ மிகவும் வாடிப் போயிருப்பதாகத் தோன்றுகிறதே! பழைய வழக்கமான கலகலப்பும் சிரிப்பும் உன்னிடம் இல்லையே? என்னம்மா, என்ன நடக்கிறது? எது உன்னிடம் கவலையாகப் புகுந்துள்ளது?

சுகுணா: ஒன்றும் இல்லை தெய்வமே! உடல் நலம் சற்றுக் குன்றியிருக்கிறது. ஓய்வெடுத்தால் போதும்...அந்தச் சிறுகதையைச் சொல்லி முடித்து விடுங்கள். எழுதி விடுகிறேன்...

குமாரகவி: வேண்டாம் அம்மா! உறக்கம் கண்களை அழுத்துகிறது. காலையில் எழுதலாம். நீயும் உடம்பைக்

கவனித்துக்கொள்ள வேண்டும். ஓய்வெடுத்துக்கொள். [இருவரும் படுக்கைக்குச் செல்கின்றனர். இருவருக்குமே உறக்கம் பிடிக்கவில்லை. ஒருவரோடொருவர் பேசிக் கொள்ளவும் இல்லை. சற்றைக்கெல்லாம் திடீரென்று தாங்க முடியாத துயரத்தால் மனம் வெடித்து அழுவதற்கு ஆயத்தம் போல், விசும்பி விசும்பி அழத் தொடங்குகிறுள் சுகுணு].

குமாரகவி: ஏன் அழுகிறுய் அம்மா? ஒரு குருடனுக்கு வாழ்க்கைப்பட்டு நம் அழகும் இளமையும் இப்படி வீணுகிவிட்டதே என்று சில நாட்களாக உனக்குள் ஒரு கலக்கம் வந்திருப்பதுபோல் நான் உணர்கிறேன்...

சுகுணு: அப்படியெல்லாம் எதுவுமில்லை தெய்வமே!

குமாரகவி: இல்லையம்மா! என்ஞல் உனக்கு வாழ்வில் ஒரு மகிழ்ச்சியும் இல்லை. இந்தக் குருடனை உன் கணவன் என்று காண்பித்து உலகில் நீ இன்ெெருரு பெண்ணுக்கு முன்ஞல் பெருமைப்படக்கூட முடியாது. அதஞல்தான் நீ பூ வைத்துக் கொள்வதைக் கூட நிறுத்திவிட்டாய். கைகளில் பண்ணிசைத்த வளைகளையும் கழற்றி விட்டாய். நேற்றிரவு நீ அயர்ந்து தூங்கிக்கொண்டிருக்கும்போது, நான் தொட்டுப் பார்த்து இவற்றை எல்லாம் உணர்ந்தேன்...நான் பிரியத்தோடு உனக்குச் செய்து அணிவித்திருந்த வைரத் தோடுகளையும், மூக்குத்திகளையும் கூட அல்லவா நீ கழற்றிவிட்டாய்! அசௌகரியங்களும் துன்பங்களும் நிறைந்த ஒரு புகழ் பெற்ற பணக்காரக் குருடனேடு வாழ்வதில் உனக்கு என்ன சுகம் இருக்க முடியும்? பணமும் புகழும் பார்வை ஆகமாட்டாதே; ஆஞல் இனிமையற்ற இந்த வாழ்க்கையையும் இனிமையானதாக ஆக்கிக்கொண்டு உன்னுடைய பார்வையால் என் அபிப்பிராயங்கள் உருவாகும்படி நீ இவ்வளவு காலம் என்னேடு வாழ்ந்த வாழ்க்கையை உணர்ந்து நீ ஒரு தேவதையாக என்

மனக் கண்ணுக்குத் தோன்றினாய்! ஏனென்றால் ஒரு மானிடப் பெண்ணுக்கு இத்தனை பொறுமையும் நிதானமும் வர முடியாதென்று எண்ணி உன்னைத் தேவதையாக நினைத்து வரித்திருந்தேன் நான்...

அருணா: (விம்மி வெடிக்கிறாள்) என்னுடைய மௌனமும் மாறுதல்களும் உங்களை எப்படியோ தவறாக எண்ணச் செய்து விட்டன. தெய்வமே! நான் சொல்வதை இப்போது நிதானமாகக் கேளுங்கள். என்னுடைய இந்தக் கவலையும் வேதனையும் உங்களால் நான் அடைந்தவையல்ல, உங்களை நான் ஒரு விநாடி கூடக் குறைவாக நினைத்து அறியமாட்டேனே...! உங்களுக்குப் பார்வை இல்லையே என்பது என்னை ஒரு போதும் வருத்தியதில்லை தெய்வமே! கண்களிருக்கிற எல்லோரையும்விட நீங்கள் பெரியவர் என்பதை நான் அறியமாட்டேனா? உங்களுடைய மனத்துக்கே கண்களின் ஆற்றல் உண்டு. கண்ணிருக்கிறவர்கள் அழகாயிருக்கிற பெண்களின் மேல் சந்தேகப்படுகிறார்கள். நீங்கள் யார் மீதும் சந்தேகமே படுவதில்லை. என்னை நம்புகிறீர்கள். உங்களுக்காகவும் சேர்த்து உலகைக் காண நம்பிக்கையோடு என் கண்களை நியமித்திருக்கிறீர்கள். ஆகவே உங்களிடமிருந்து நான் எதையும் மறைக்கக் கூடாது. இப்போது நான் கூறப் போகிற விவரங்களைப் பொறுத்தவரை பார்வை என்னுடையது. இதன் மீதான அபிப்பிராயம் இனி உங்களிடமிருந்துதான் தெய்வமே பிறந்தாக வேண்டும். உங்களை மனத்தில் என்மேல் உருவாகியிருக்கும் எல்லையற்ற அபிமானம் எங்கே குன்றிப்போய் விடுமோ என்று பயந்து போய்த்தான் இந்தப் பதினைந்து நாட்களாய் இதை நான் உங்களிடம் கூறாமல் மூடி மறைத்தேன். இப்போது இனியும் அப்படி மறைக்கும் எண்ணம் எனக்கு இல்லை. நான் உங்களைப் பூரணமாக நம்புகிறேன்...

(எழுந்துபோய் மேசை இழுப்பறையில் வைத்திருந்த மிரட்டல் கடிதங்களை எடுத்து வருகிறாள். விளக்கைப் போட்டு ஒரே மூச்சாக அவற்றை எல்லாம் அவரிடம் படித்து முடிக்கிறாள். பின்பு அவரிடம் மன்றாடுகிறாள்.)

சுகுணா: தெய்வமே! அபவாதம் என்னைப் பற்றியது என்கிற கூச்சமோ தயக்கமோ எனக்கு இல்லை. கடமையைச் செய்கிற மனநிலையில் எல்லாவற்றையும் அப்படியே படித்துவிட்டேன். (விம்மி விம்மி அழுகிறாள்.) தெய்வமே! பார்வை மட்டும் என்னுடையது. அபிப்பிராயம் உங்களுடையது. உங்களுக்காகவும் சேர்த்து உலகைப் பார்க்க என் கண்களை நீங்கள் நியமித்திருக்கிறீர்கள். என் கண்கள் உங்களுக்குத் தெரியாமல் இனி எதையுமே மறைக்காது. இதை இத்தனை நாட்கள் மறைத்து வைத்ததற்காக நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும்...

குமாரகவி: சுகுணா! இதை நினைத்துப் பயந்து நீ இவ்வளவு நாள் இப்படி ஒடுங்கிப்போயிருக்க வேண்டியதில்லை! உன்னுடைய மனத்தின் வலிமை, இதை நீ வாய்க்கூசாமல் எனக்குப் படித்துக் காண்பித்ததிலிருந்தே தெரியவில்லையா? உன்னுடைய அழகை எப்போதேனும் காண்பதற்காகவாவது ஒரு விநாடிப் போதாகிலும் எனக்குக் கண்பார்வை வரவேண்டும் என்று முன்பு பலமுறை நான் நினைத்தேன். இப்போது எனக்கு அந்த ஆசை போயே போய்விட்டது. ஒரு வேளை நீ அழகாய் இருப்பதைப் பார்த்தால் என் கண்களிலும் சந்தேகம் தோன்றலாம். உன் மனம் அழகாயிருப்பதை நான் நிரந்தரமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். அந்தப் பார்வை ஒன்று மட்டுமே போதும் என்று இப்போது நான் மனம் நிறைவடைகிறேன் அம்மா!

சுகுணா: (அழுகிறாள்) உங்கள் மனம் மிகவும் உயர்வானது தெய்வமே...

குமாரகவி : அசட்டுப் பெண்ணே! இதற்காக இப்படி அழலாமா? மாமிசக் கண்களால் மட்டுமே பார்க்கத் தெரிந்த யாரோ ஒரு சாதாரண மனிதன் ஏதோ கிறுக்கியிருக்கிறான். இந்தப் பார்வைக்கு என்னிடமிருந்து அபிப்பிராயமே கிடையாது. உன் அழகை நான் மனக் கண்ணால் பார்க்கிறேன் அம்மா! அதனால் அதைப் பற்றிய அபிப்பிராயம் என்றும் மிகமிக உயர்ந்த தாகவே இருக்கும். உன்னை நான் பார்ப்பதற்கும் புரிந்து கொள்வதற்கும் இந்த அயோக்கியனின் ஊனக் கண்கள் எனக்குத் தேவையில்லை. உன்னை மட்டும் பார்ப்பதற்கென்று வேறு விஷயங்களைப் பார்த்துக் கறைப்படுத்திக் கொள்ளாத தனிக் கண் ஒன்றை நான் பெற்றிருக்கிறேன் அம்மா! இந்த விநாடியிலிருந்து மறுபடி பூவும் வளையுமாக, என் கிருகலெட்சுமியாக நீ வந்து நிற்கவேண்டும்! நீ பார்வை! நான் அபிப்பிராயம்! நமக்குள் இரண்டும் எப்போதும் வேறுபடுவதில்லை. எனக்காக உலகைக் காண நான் நம்பிக்கையோடு உன் கண்களை நியமித்திருக்கிறேன். அதே சமயத்தில் உன்னைக் காண மட்டும் என்னிடம் தனியாகவே ஒரு கண் இருக்கிறதே!

(வாஞ்சையோடு, ஆதரவாக அவளை நெருங்கி அணைத்துக் கொள்கிறார்)

சுகுணா : விடிந்து விட்டது... தெய்வமே!

குமாரகவி : ஆம்! உனக்கும் எனக்கும் என்று சொல். பதினைந்து நாட்களுக்குப் பிறகு மறுபடி விடிந்திருக்கிறது அம்மா! இந்த விரசமான கடிதங்களால் என்னுடைய அபிமானம் உன்மேல் குன்றிவிடுமோ என்று நீ பயந்ததும், அந்தப் பயத்தால் இந்தக் கடிதங்களை என்னிடம் மறைத்ததும் குற்றங்களில்லை. ஆனால் உன்னை நீயே வாட்டிக் கொண்டு பூவில்லாமல், நகையில்லாமல் வாடி ஒடுங்கியதுதான் குற்றம். மன்னிக்க முடியாத

குற்றம். இத்தனை ஆண்டுகளாய் உன்னை மறந்து, எனக்காக உன் கண்களால் உலகத்தைப் பார்த்தவரை நீ தியாகியாய் இருந்தாய். இந்தக் கடிதங்கள் உன்னை மிரட்டிய காலத்தில் நீ என்னை மறந்து உனக்காக மட்டுமே உலகத்தைப் பார்க்கத் தொடங்கினாய். அதனால் அந்தச் சுயநலத்தில் வாடினாய். உன்னை மறந்த பரவசத்தில்தான் அம்மா தியாகம் பிறக்கிறது. நீ தேவதை! நான் உன்னைக் குறை சொல்ல மாட்டேன். ஆனாலும் நீ கடந்த பதினைந்து நாட்களாக, 'உன்மேல் எனக்குள்ள வாஞ்சையை இந்தக் கடிதங்கள் போக்கி விடுமோ' என்ற பயத்தில் கவலைப்பட்டு என்னை மறந்து உனக்காக மட்டுமே நினைத்து உலகத்தைப் பார்த்திருக் கிறாய் என்பதை இப்போது என்னிடம் நீ மறுக்க முடியாது. பூதம் காட்டுகிற கண்ணாடியைப்போல் பார்வையும் அபிப்பிராயமும் முரண்படுகிற நிலைமை யும் உலகில் உண்டு அம்மா. நல்ல கண்ணாடியில் பார்க் காதது நம்முடைய குறைதானே?...இதுபோல் மட்ட மாக இனிமேலும் ஏதாவது கடிதங்கள் வந்தால் என்னிடம் சொல்லாமலே அவற்றைக் கிழித்தெறி. அபிப்பிராயத்தை உருவாக்க அவசியமில்லாத, வெறும் பார்வை அளவில் நின்றுவிடவேண்டிய சிறிய விஷயங் கள் எத்தனையோ உலகில் உண்டு. அவற்றைப் பற்றியும் அபிப்பிராயம் சொல்ல ஆரம்பித்தால் அப்புறம் வீண் கவலைதான் நம்மை வாட்டும். மிக மிகக் கஷ்டமான வற்றையும் பார். வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனால் பார்வை மட்டும்தான் உனக்குச் சொந்தம். அபிப்பிராயமும் கவலையும் கொள்வதற்கு நான் இருக் கிறேன். தாமதம் சிறிதுமின்றி உன் பார்வைகளை என்னிடம் சமர்ப்பித்துவிடு. அந்தக் கடிதங்களைப் பார்த்து நீயே அபிப்பிராயத்தையும் படைத்துக் கொண்டு உனக்குள் உருகிச் சீரழிந்ததுபோல் இனி ஒரு கணமும் செய்யாதே! நினைவு வைத்துக்கொள்! எனக்

காக உலகத்தைப் பார்க்க மட்டும்தான் நம்பிக்கை வாய்ந்த உன் கண்களை என் வழித்துணையாக நான் நியமித்திருக்கிறேன் என்பதை மறந்து விடாதே!

சுகுணு: எதையும் இனி நான் மறைப்பதற்கில்லை தெய்வமே. முக்கியமாக ஒரு வேலையை உடனடியாகச் செய்தாக வேண்டும்.

குமாரகவி : என்ன அது?

சுகுணு : ஆமாம்! அந்த மிரட்டல் கடிதங்கள்...அவற்றை அக்கினி தேவனுக்கு இரையாகக் கொடுக்க வேண்டும். (கற்றைக் காகிதங்களை அப்படியே விளக்கின் சுடரில் பற்ற வைக்கிறுள். உள்ளே காகிதப்புகை சூழ்கிறது)

குமாரகவி : பார்த்துக் கவனமாக எரியவிடு பெண்ணே... கையைச் சுட்டுக்கொள்ளப் போகிருய்!... (சிரிக்கிருர்.)

திரை

# வழித்துணை

## நாடக விளக்கம்

**காலம் :** தற்காலம்

**களம் :** மணிமாலை இதழ் அலுவலகம்

**இடங்கள் :** குருகுமலையின் சரிவிலுள்ள திராட்சைத் தோட்டங்கள், இலண்டன் தமிழ் மன்ற வரவேற்பு, குமாரகவியின் இல்லம், நிலா முற்றம்.

**பாத்திரங்கள் :** குமாரகவி (அந்தகர்) மணிமாலை இதழாசிரியர் கவிஞர், கதாசிரியர் சுகுணா—அவரிடம் பணிகளுக்குத் துணையாக வேலை பெற்றுப் பின் வாழ்க்கைத் துணையாகவும் வழித்துணையாகவும் உயர்ந்தவள், மணிமாலை இதழ் மேலாளர் மற்றும் அலுவலகப் பணியாளர், மக்கள், இதழ் வாசகர்கள். ஒரு பத்திரிகை அலுவலகச் சூழலில் கதையின் பெரும் பகுதி நடப்பதால் அச்சூழ்நிலைக்கேற்ற பிற பாத்திரங்களும், பணியாளரும், வந்துபோக வேண்டிய இயல்பு உள்ளது.

